குடும்பத்துடன் களிக்க...

# கல்கி

சிரிப்பு ஸ்பெஷல்!

KALKI 8.1.2006 ரூ.7.00
96 பக்கங்கள்



## விவேக்கிடம் மாட்டிய தீவிரவாதி!

மாணிக்கவாசகர்
அருளிய

# திருவாசகம்



## திருத்தணி சுவாமிநாதன் அவர்களின் கணீர் குரலில்

**MP3**

கிடைக்குமிடம் :

**பாலா கிராபிக்ஸ்,**
52, ரங்கன் தெரு, தியாகராய நகர்; சென்னை - 17.
(சென்னை சில்க் எதிர்ப்புறம்)
ஃபோன் : 2434 7464, 2432 2456,
2433 2344, 9381347464

- கோவை : விஜயா பதிப்பகம் ஃபோன்: 2382614/2394614
- சேலம் : சந்திரா ஃபோன்: 2265635
- திருச்சி : திருச்சி புக் ஹவுஸ் ஃபோன் : 2764 198/2766815
- மதுரை :செல்வி ஃபோன் : 5380169/2343510
- நெல்லை: அருள் நந்தி சிவம் ஃபோன்: 2339692/2338443
- திருவண்ணாமலை : ஸ்ரீ அருணா வரதன் ஃபோன்: 250272/254600
- காஞ்சிபுரம் : குரு ஃபோன். 27260256
- விழுப்புரம் : கீதா ஃபோன்: 225183/9865754879
- புதுக்கோட்டை : எஸ்.பி.எம். ஃபோன்: 230035/9443531950
- தஞ்சாவூர் : அன்னம் ஃபோன்: 279288/9443159371
- தருமபுரி : சதீஷ் ஃபோன் : 268112

ஆகிய இடங்களில் ரூ. 125 மட்டும் செலுத்தி உடனே பெறலாம்.

# ஜோ ரசிச்ச ஜோக்!

சானியா மிர்ஸா ரசிகையான ஜோதிகா, தேர்வு செய்த துணுக்குகள் இதோ... ஜோ, வாய்விட்டு சிரிச்ச ஜோக் எது தெரியுமா?



''மேட்ச் விளையாடுறப்ப எதுக்கு குட்டைப் பாவாடையக் கட்டிக்கறீங்க?''

''சின்ன வயசுல எடுத்த எந்த டிரஸ்ஸையும் நா வீணாக்க மாட்டேன்!''

- அம்பை தேவா



''என்ன திடீர்னு உம் பொண்ணு டென்னிஸ் ஆடறா?''

''சானியா டிரஸ் போட்டுக்க ஆசை வந்துடுச்சாம்!''

- குவளை எழில்



''என் காதலா சானியா மிர்சா ரசிகர்!''

''அதை ஏன் வருத்தமா சொல்ற?''

''என்னைக்கூட 34வது இடத்துல தான் வைச்சுருக்கார்!

- அம்பை தேவா



விடை: டிரஸ்ஸை வீணாக்காத ஜோக்தான்!



* மதி

# கோடு போட்டு... சிரிப்பு மூட்டி!



காமெடியின் ஷார்ட்கட் வடிவம்தான் கார்ட்டூன். பிரபல கார்ட்டூனிஸ்டுகளான 'ஹிந்து' கேஷவ், 'தினமணி' மதி இருவரிடமும் ஒரே மாதிரியான கேள்விகளைக் கேட்டோம்.

**கா**ர்ட்டூன் வரையறதுக்கு எப்படிப்பட்ட சூழ்நிலை தேவைப்படும்?

**கேஷவ் :** எந்த மாதிரி சூழ்நிலையிலயும் வரைய முடியும். ஏன்னா நம்ம ஃபீல்டே பரபரப்பானதாச்சே!

**மதி :** கொஞ்சம அமைதியான சூழல்ல வரையறப்போ நிச்சயமா நல்ல அவுட்புட் கிடைக்கும். அதனால வீட்ல வரையவே மாட்டேன்.

கார்ட்டூனிஸ்டுன்னா எப்பவுமே நகைச்சுவையான மூட்ல இருக்கணுமா?

**கேஷவ் :** கண்டிப்பா! ஆனா எல்லா நேரத்துலயும் அப்படி இருக்கறது சாத்தியமில்ல. குறைந்தபட்சம் கார்ட்டூன் போடறப்போவாவது இருக்கணும்.

**மதி :** ஹியூமர்ங்கறது ரத்தத்துலயே ஊறிப்போன விஷயம்தானே? அதனால தனியா ஒரு ஹியூமரஸ் மூட் அவசியமே யில்லை.

இதுவரையும் எவ்ளோ கார்ட்டூன்ஸ்

## அறிவிப்பு

**ப**த்திரிகைக் காகிதம், மேலட்டைக்கான ஆர்ட் காகிதம் மற்றும் பத்திரிகை அச்சாவதற்கான இதர பொருள்கள் ஆகிய அனைத்தின் விலைகளும் அதிக அளவில் உயர்ந்துவிட்ட போதிலும், 'கல்கி' விலையை வாசகர் நலன் கருதி ஏழு ரூபாயாகவே வைத்திருந்தோம். ஆனால்,





• கேஷவ்

போட்டிருப்பீங்க..

**கேஷவ்** : ஃபீல்டுக்கு வந்து முதல் ஐந்து வருஷத்துல 3000 கார்டூன்ஸ் போட்டேன். அப்புறம் கணக்கு எதுவும் வச்சுக்கல..

**மதி** : 'தினமணி'க்கு மட்டும் 5000 போட்டிருக்கேன். அதுக்கு முன்னால நிறைய பத்திரிகைகளுக்குப் போட்டிருக்கேன்.

**இன்றைய இளைஞர்களுக்கு கார்ட்டூன் வரைவதில் ஆர்வம் இருக்கிறதா...?**

**கேஷவ்** : கால்சென்டர், சாஃப்ட்வேர்னு பணம் கொட்டற துறைக்குப் போக ஆசைப்படறாங்களே தவிர, இந்த மாதிரி ஃபீல்டுக்கு வர விரும்பறதில்லை.

**மதி** : பொது அறிவு, ஹியூமன் சைக்காலஜி, நகைச்சுவை உணர்வு மூணும் யார்கிட்ட இருக்கோ அவங்கதான் நல்ல கார்ட்டூனிஸ்டா வரமுடியும். அப்படிப்பட்டவங்க இப்போ ரொம்ப கம்மிதான்!

**- கிறுக்கல் கிட்டப்பா**

தற்போது வேறு வழியின்றி மேலும் ஒரு ரூபாய் விலை ஏற்ற வேண்டிய நிர்ப்பந்தம்.
2006, ஜனவரி 15ம் தேதி இதழ் முதல் கல்கி தனிப் பிரதி விலை ரூ.8/-.
தொடர்ந்து ஆதரவு கொடுக்க வேண்டுகிறோம்.

பதிப்பாளர்,
கல்கி நிறுவனப் பத்திரிகைகள்


**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22251522, 22250623,
22251324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.390/-
ஆறு மாதம் : ரூ.195/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 63.50 யுஎஸ். டாலர்
இலங்கை : ரூ.2060/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# விவேக்கிடம் மாட்டிய தீவிரவாதி!



**ரொம்ப பிஸியாக இருந்தார் விவேக். ஒரு பத்து நிமிஷம் வெளியே வந்து காஷுவலாகப் பேசிவிட்டுப் போனார். அவ்வளவுதான். சிரிப்பு ஸ்பெஷலுக்கு அட்டைப்பட மேட்டரே தேறிவிட்டது. ஜோக்கையே சுவாசிச்சு, சிரிப்பையே சாப்பிட்டு, நகைச்சுவையிலேயே தூங்கி வாழும் விவேக்கைட்ய சிரிக்க வைத்த சில அனுபவங்கள்.**

“நான் கதாநாயகனா நடிக்கிற படம் ‘சொல்லியடிப்பேன்!’ அதில் ஒரு காட்சி. நான் காலேஜில் பண்ணின ஒரு குற்றத்துக்காக பிரின்ஸிபல் என்னை நிறுத்தி வைச்சுக் கேள்வி கேட்பார். அவர் என்கிட்ட ‘உன் அப்பா பேர் என்ன?’ன்னு கேட்டதுக்கு நான் கிண்டலா ஏதாவது சொல்லியாகணும். அப்போ வசன கர்த்தா பிரசன்னகுமார் உதவிக்கு வந்தார். ‘சார் நான் டெஸ்ட் ட்யூப் பேபி. அப்பான்னு எல்லாம் யாரும் தெரியாது’ன்னு எழுதிக் கொடுக்க ரொம்ப ரசிச்சபடி அந்தக் காட்சியில நடிச்சேன்.

சமீபத்துல இன்கம்டாக்ஸ் ரெய்டு வந்தபோது என் வீட்டிலயும் சோதனை நடந்துச்சு. அப்போ ‘முருகன்’ங்கிற பெயர் அவங்க கண்ணில் பட்டிருக்கு. ஃப்ரெண்டுன்னு அவங்களுக்குப் பதில் சொல்லியிருந்தாலும் அவங்க வேற மாதிரி யோசிக்க ஆரம்பிச்சுட்டாங்க. ‘முருகனைப்பத்தி மட்டும் சொல்லுங்க. நாங்க போயிடறோம்’னு எங்கம்மாகிட்ட சொல்லவே, அம்மா, ‘நான், முருகன் கூடதான் இருக்கேன்’னு சொல்லியிருக்காங்க. ‘அப்படியா, வாங்க போய்ப் பார்ப்போம்’னு உஷார் ஆயிருக்காங்க. அதற்கு அம்மா, ‘என்னால வரமுடியாதுங்க. இங்கிருந்தே காட்டறேன்’னு ஜன்னலைத் திறந்து காண்பிச்சது வடபழனி முருகன் கோயிலை! ‘இதுதான்

என் அப்பன் முருகன். இவன்தான் என் மகன் கூடவே இருக்கான்'னு வெகுளியாகச் சொல்ல டென்ஷன் ஆயிருக்காங்க அதிகாரிகள்.

என் பொண்ணு தேஜஸ்வினி பயங்கர குறும்புக்காரி. ஸ்கூல்ல, கார் தயாரிக்கறவர் மெக்கானிக், ஒயர் வேலை பண்றவர், எலக்ட்ரிசியன்னு லைனா சொல்லிட்டு பென்சில் தயாரிக்கிறவர் யார்னு கேட்டதுக்கு அவ 'டக்'குன்னு சொன்ன பதில் - நடராஜர்! "பாருங்க மிஸ், பென்சில்ல அவர் பேருகூட போட்டிருக்கு''னு அவ டீச்சரையே ஓட்டியிருக்கா.

'பரமசிவன்' படத்துல 'பரமசிவன்'ங்கிற தீவிரவாதியை போலீஸ் தேடிட்டு இருக்கும். இன்ஸ்பெக்டரான நான் நல்ல பேர் வாங்கறதுக்காக தனியா தேடுவேன். ஓபனிங் ஸீன்ல தீக்குச்சியைக் கிழிச்சு ஸ்டைல் பண்ணுவேன். சிகரெட் பிடிக்கற மாதிரிக் காட்சிகள் வரக்கூடாதுன்னு சொன்னதால இந்த மாற்று ஏற்பாடு. என்னுடைய வேட்டையில சந்தீப் ராமசாமிங்கிறவன் பிடிபடுவான். இவன் எப்படின்னா அஞ்சு நிமிஷத்துக்கு ஒருமுறை எல்லாத்தையும் மறந்துடுவான். இவனும் உடம்புல பச்சை குத்தியிருப்பான். அதுல 90C, MP, WP, HSB, PSன்னு எழுதியிருக்கும். நான் போலீஸ் அதிகாரிகள் முன்னாடி ஜம்பமா, "பாருங்க இவன்தான் நாம தேடற தீவிரவாதி. 90C-ங்கிறது 90 கோடி, MP-ங்கிறது மெம்பர் ஆஃப் பார்லிமெண்ட், WP-ங்கறது இவன் தம்பி வந்த இடம் west pakistan. அந்த தொண்ணூறு கோடியையும் Hongkong Shankai Bank-ல பதுக்கி வைச்சிருக்கான்"னு நான் உதார் விடுவேன். அதுசரி இவன் எப்படி தீவிர வாதியானான்னு அதிகாரிகள் கேட்பாங்க. நான் சிரிச்சுக்கிட்டே, "கடைசியில இருக்கிற PSவேற எதுவுமில்லை. Paramasivan'னு கொக்கரிப்பேன். அதுக்குள்ள சந்தீப் ராமசாமி நினைவு வந்து எல்லாத்தையும் தலைகீழா விளக்குவான்.

''சார் 90Cங்கிறது நைன்ட்டி கட்டிங். நான் மறக்காம தினமும் தண்ணியடிக்கணுங்கிறதுக்காக அப்படி எழுதியிருக்கேன். அதுக்கப்புறம் மறக்காம முட்டைப் பொரியல் சாப்பிடணும். அதுதான் MP"ன்னு சொல்ல நான் டென்ஷனாகி ''அப்போ WPங்கிறது West



Pakistan தானே''ன்னு கேட்க, அவன் கூலா ''இல்லை, அது water packet. கடைசியா HSB, அதாவது Hotel Saravana Bhavanல போய் சாப்பிடணும். இது எதுவுமே இல்லாட்டி இருக்கவே இருக்கு PS. அதாவது பழைய சோறு''ன்னு சொல்ல, அப்பப்பா...இந்த ஸீன சிரிக்காம ஷூட் பண்றதுக்குள்ளே போதும் போதும்னு ஆயிடுச்சு.

'**வ**ணக்கம் தலைவா' படத்துல சத்யராஜ் ஜெயில்ல மாட்டிப்பார். போலீஸைக் குழப்பி, நாடகமாடி அவரை வெளியே எடுக்கணும். நானும் என் மனைவியும் போலீஸ் ஸ்டேஷன் முன்னாடி ரகளை பண்ண, போலீஸ் பிடிச்சு விசாரிக்கும். அப்போ நான் சொல்லுவேன், ''அய்யா, தமிழ்நாட்டுல ஆளாளுக்கு ஒரு டென்ஷன். எனக்கும் ஒரு டென்ஷன் இருக்கு. குடிசையை விட்டு வெளியில வந்தா ஒரு பக்கம் அம்மா அழைக்கிறார்... கலைஞர் அழைக்கிறார்னு போஸ்டர். இன்னொரு பக்கம், அய்யா அழைக்கிறார்... வைகோ அழைக்கிறார்... விஜய்காந்த்து அழைக்கிறார்னு எக்கச்சக்க போஸ்டர்கள். இது பத்தாதுன்னு இப்போது புதுசா 'கார்த்திக் அழைக்கிறார்'னு வேற ஒட்டிக் குழப்புறாங்க. ஒருத்தனை இத்தனை பேர் கூப்பிட்டா நான் யார் கூட்டத்துக்குப் போவேன். ஒருத்தருக்குப் போனா இன்னொருத்தர் கோவிச்சுக்க மாட்டாங்களா'ன்னு சொல்ல, இந்த காமெடியைத் தியேட்டர்ல பார்க்கும்போது எனக்கே தாங்க முடியாத சிரிப்பு வந்துருச்சு!

சந்திப்பு: **கெட்டி சட்னி**

அட்டை, படங்கள்: **ஸ்ரீஹரி**

# சொல்கிடோ? சொல்கிட்டோ?



**ச**ங்க காலத்தில் இவர்கள் இருந்து செய்யுள் எழுதியிருந்தால் எழுதிய நூலுக்கு என்ன பெயர் வைத்திருப்பார்கள்? இதோ...

சினிமா பாடலாசிரியர் : 'கட்டுத்தொகை; குத்துப்பாட்டு'

வருமான வரித்துறை அலுவலர்: 'கறுந்தொகை'

க்ரைம் எழுத்தாளர்: ' 'கில்காப்பியம்'

வாகன ஆய்வாளர் : 'எட்டடியார்'

போலீஸ்காரர் : 'கற நானூறு'

சிகையலங்கார நிபுணர் : 'சிகைக்காய் சிந்தாமணி'

உடற்பயிற்சியாளர்: 'தண்டலகேசி'

பால்காரர் : 'கலப்பதிகாரம்'

மெகா சீரியல் இயக்குனர் : 'அழ நானூறு'

டாக்டர் : 'நலம் வீண்பா'

வேலைக்குப் போகும் பெண்: 'வளைய்யா பதி!'

- **வீ. விஷ்ணுகுமார்**

CHEAPEST PRICE SHOP IN TAMILNADU OM SRI VENKATESWARA STEEL HOUSE & TEXTILES
CHEAPEST PRICE SHOP IN TAMILNADU OM SRI VENKATESWARA STEEL HOUSE & TEXTILES

வழக்கமாகத் தலையை ஆட்டி, 'பேஷ்', 'பலே', 'சபாஷ்'களை தாராளமாக அள்ளி வீசும் ரசிகர்கள் ரொம்ப பவ்யமாய்க் கட்டுப்பாடுடன் உட்கார்ந்திருந்தார்கள். மார்கழி இருமலும் தும்மலும்கூட பெருமுயற்சியுடன் அடக்கி ஆளப்பட்டன. மியூசிக் அகாடமி அரங்கில் ஒரு சீட்கூட காலியில்லை. இத்தனைக்கும் மேடையில் நிகழ்ந்துகொண்டிருந்ததென்னவோ ஒத்திகைதான் - ஆனால் வாராது வந்த ஜெர்மன் நாட்டு பவேரியன் ஸ்டேட் ஆர்கெஸ்ட்ராவின் ஒத்திகை. பின் மாலை நிகழ்ச்சிக்கான ஒத்திகையை நடத்திக்கொண்டிருந்தார் ஜூபின் மெஹ்தா.

பதினாறாம் நூற்றாண்டில் முளைவிட்டு, பாரம்பரியமிக்க முறையில் படிப்படியாக உருவாகி இன்று உலகளாவிய அங்கீகாரத்துடன் இசைத்துக்கொண்டிருக்கும் இந்தக் குழுவுக்கு 1998-99ல் இசை இயக்குனராகப் பொறுப்பேற்றார் மெஹ்தா.

'ஒத்திகைதான்' என்ற உணர்வுக்கே இடம் தராமல் குழு இசைத்தது. எனினும் மெஹ்தா குறுக்கிட வேண்டிய இடங்களில் குறுக்கிட்டுத் திருத்தினார். மீண்டும் வாசிக்கச் சொன்னார் - பிரதானமாக வயலின்களும் மெலிதான ஒலியுடன் புல்லாங்குழல், செல்லோ போன்ற வேறு சில கருவிகளும் அடங்கிய வாத்தியக்குழு வாசித்த வெர்டி, ஷூபர்ட், பீதோவன் படைப்புகளை, ரசிகர்கள் முழுமையாகப் புரிந்துகொண்டு வியந்ததாகச் சொல்ல முடியாது. ஆனால், அந்த இசையின் பின் அமைந்திருந்த படைப்புத் தாகமும் அழகியல் உணர்வும் புரிந்தன. அவற்றை வெளிக்கொண்டு வர குழுவினர் மேற்கொண்ட ஆத்மார்த்தமான முயற்சி புரிந்தது; சுனாமி நிவாரண நிதி திரட்ட உதவுவதற்காக கிறிஸ்துமஸ் தினத்தன்று பயணம் செய்து இந்தியா வந்தவர்களின் தியாக உணர்வு புரிந்தது. இவையெல்லாம் சேர்ந்து ஓர் ஒத்திகையை, உயர்ந்த அனுபவமாக உயர்த்திவிட்டன.



புரிந்துகொண்டு திளைக்கும் கூட்டம் கிருஷ்ணகான சபாவில். மார்கழியில் தினமும் காலை விட்டல்தாஸ் 



• ஜூபின் மெஹ்தா

ஜெயகிருஷ்ண தீக்ஷிதர் குழுவினர் வழங்கும் ஹரிநாம சங்கீர்த்தன உபன்யாஸ - இசை வந்தனம். இங்கும் இருக்கைகள் நிறைந்துள்ளன. ஆனால், மௌனமாய் ரசிப்பதற்குப் பதில் கூடவே பாடியும் கைகொட்டியும் கூட்டம் சேர்ந்தனுபவிக்கிறது. அரங்குக்குள் நடந்துவந்த சத்ஸங்கம் ஒரு நாள் (24.12.05) நகர்வலம் புறப்பட்டுவிட்டது. தீக்ஷிதரும் பஜனைக் குழுவி

னரும் ஒரு லாரியில்; ஒலி பெருக்கி அமைப்புகள் இன்னொரு லாரியில். அரங்கை நிறைத்த ஆயி



• ஜெயகிருஷ்ண தீக்ஷிதரின் நகர்வலம்

பாகவதரின் திளைப்பையும் பக்தர்களின் பரவசத்தையும் பார்த்துவிட்டு, பந்தோபஸ்துக்கு வந்த காவல் துறையினர் கலகலத்துப் போனார்களாம். இப்படியொரு வாய்ப்பு ஏற்படுத்திய கிருஷ்ணகான சபாவுக்கு நன்றி சொன்னார்களாம்!

இதுதான் சென்னை இசைவிழா. இங்கே பவேரியன் ஆர்கெஸ்ட்ராவுக்கு வியப்பு கலந்த மரியாதை கிடைக்கிறது; பாகவத கானத்துக்கு பக்தி மேலிட்ட அங்கீகாரம் இருக்

# மயிலாப்பூரில் ஜெர்மனி; பனகல் பார்க்கில் பண்டரிபுரம்!

ரம் பேரும் பின்தொடர பாகவதர் குழு அவர்களைப் பார்க்க நின்று பஜனை கீதங்கள் பாடியபடி பனகல் பார்க்கை வலம் வர... 'பீக் அவர்' (காலை 8.15 - 9 மணி) போக்குவரத்து பவ்யமாய் இடம்விட்டு ஒதுங்கிச் செல்ல, சாலையில் உள்ள குண்டு - குழிகளில் யாரும் தடுக்கி விழாதபடி சிறு சிறு குழுவினர் அவற்றுள் நகராமல் நின்றுகொண்டு கூட்டத்தை நெறிப்படுத்த, அக்கம்பக்கத்து கட்டடங்களின் உச்சியில் ஏறிக்கொண்டு காமெரா/வீடியோ கலைஞர்கள் அதிசயத்துடன் படம் பிடிக்க... ஜெயகிருஷ்ண தீக்ஷிதர் மெய்மறந்து எழுப்பிய விட்டல் நாமமும் ஜால்ரா - சிப்ளாக்களின் ஜல்ஜல் இசையும் பனகல் பார்க்கைச் சிறிது நேரத்துக்குப் பண்டரிபுரமாக்கிவிட்டன.

கிறது. கலாசாரங்களைக் கடந்து இசையால் இதயங்களை இணைக்க முடிகிறது; பக்தி - பண்பாடு வட்டத்துக்குள் மக்களைப் பிணைத்து ஒருணர்வில் ஒன்றச் செய்யவும் முடிகிறது.

'பக்திக்கும் கர்நாடக சங்கீதத்துக்கும் சம்பந்தமே இல்லை... ஆன்மத் தேடல் ஆன்மிக எழுச்சி என்பதெல்லாம் இதில் கிடையவே கிடையாது. அறிவார்த்தமான கலை இது' என்ற ஒரு கருத்தும் இசை வட்டாரத்தில் வலம் வருகிறது. சட்டியில்லாமல் குழம்பு சமைக்கும் இந்த முயற்சி பற்றிய ரசிகர்களின் சிந்தனைகளுக்கு வழிவிட்டு ஒதுங்கிக்கொள்ள தும்புரு தயார். சீசன் சூடு ஆறுவதற்குள் எழுதிப் போடுங்கள். ○

# ஆட்டம் காணும் ஆறு அமைச்சர்கள்!

போலி வாக்காளர் விண்ணப்பங்கள் குறித்துத் தேர்தல் கமிஷன் வழக்குப் பதிவு செய்யப் போகிறது என்றவுடன் நடுங்கிப் போனது ஆளுங்கட்சி வட்டாரம். வழக்கம் போல நீதிமன்றத்தை நாடியது. பொதுப்பணித்துறை அமைச்சர் ஓ.பன்னீர்செல்வம் "தனிப்பட்ட விண்ணப்பதாரர் மீதுதான் நடவடிக்கை எடுக்க வேண்டும். மொத்தமாக மனு தாக்கல் செய்தவர்கள் மீது நடவடிக்கை எடுக்கக்கூடாது'' என்று வழக்குத் தொடர்ந்தார். ஆனால் சென்னை உயர்நீதிமன்றம் நெற்றியடியாக, கடந்த மாதம் 21-ம் தேதி, "மொத்தமாக விண்ணப்ப படிவம் கொடுத்தவர்கள் மீதும் சட்டப்படி நடவடிக்கை எடுக்கலாம்'' என்று தேர்தல் கமிஷனுக்குப் பச்சைக் கொடி காட்டிவிட்டது.

அன்று இரவே சென்னை வந்தார் துணைத் தேர்தல் அதிகாரி ஆனந்தகுமார். அடுத்த நாளிலிருந்து அதிரடியாக வழக்குகள் பதிவு செய்யப்பட்டன. மாவட்டச் செயலாளர்களாகவும் உள்ள ஆறு மாநில அமைச்சர்கள், அரை டஜன் ஆளும்கட்சி மாவட்டச் செயலாளர்கள் ஆகியோர் மீது வழக்குப் பதிவு செய்யப்பட்டது. மாநில நிர்வாகத்தின் ஆளுகையின் கீழ் வரும் மாவட்டத் தேர்தல் அதிகாரிகள், அமைச்சர்கள் மீது வழக்குப்பதிவு செய்ய முதலில் கொஞ்சம் தயக்கம் காட்ட, தேர்தல் கமிஷனரிடமிருந்து வந்த கடுமையான உத்தரவு அவர்களைச் செயல்பட வைத்தது.



* சோமசுந்தரம்

மாநில தலைமைத் தேர்தல் அதிகாரி நரேஷ்குப்தாவுக்கு இரண்டு பக்கமும் இடி. "எனக்கு எந்தவிதமான அரசியல் தாக்கமும் இல்லை'' என்கிறார் அவர். ஆளுங்கட்சி பிரமுகர்கள் என்று மட்டுமல்லாமல் நான்கு தி.மு.க. மாவட்டச் செயலாளர்கள் மீதும் வழக்குப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது.



* பாண்டுரங்கன்

ஆனால் தி.மு.க தரப்பு வழக்கம்போல் இதை அரசியல் வஞ்சகம் என்கிறது. "ஆளுங்கட்சியினர் லட்சக் கணக்கில் போலி விண்ணப்பங்களைக் கொடுத்தார்கள். ஆனால் எங்கள் கட்சியினர் நியாயமான முறையில் உண்மையான நபர்களின் விண்ணப்பங்களைத்தான் தாக்கல் செய்தார்கள். ஒன்றிரண்டு தவறுகள் நேர்ந்திருக்கக் கூடும். ஆனால் ஆளுங்கட்சியினரின் நிர்பந்தத்தின் பேரில் போலீஸும் அதிகாரிகளும் சிலரிடம் வலுக்கட்டாயமாகப் புகார்களைப் பெற்று எங்களின் மீதும் வழக்குப் பதிவு செய்கிறார்கள். அவர்களின்

# அம்மாவுக்குப் புதிய

நோக்கம் பொது மக்களிடம் எங்கள் பெயரையும் டேமேஜ் செய்ய வேண்டும்'' என்பது தான் என்கிறார் தி.மு.க. அமைப்புச் செயலாளர் டி.கே.எஸ். இளங்கோவன்.



* அனிதா ராதாகிருஷ்ணன்

"எங்கள் அமைச்சர்கள் வழக்குகளைச் சந்திக்கத் தயாராக இருக்கிறார்கள். எங்களைக் குற்றம் சாட்டும் தி.மு.க.வினர் யோக்கியமா? ஒரு போலி விண்ணப்பத்தைக் கொடுத்தால்கூட சட்டப்படி நடவடிக்கையைச் சந்திக்க வேண்டும். தமிழகம் முழுதும் திமுகவினர் மீதும் வழக்குகள் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. அவர்களுடைய வருத்தம் அல்லது வயிற்றெரிச்சல் என்பது 'ஆளுங்கட்சியாக இல்லாமல் போய் விட்டோமே' என்பதுதான். அமைச்சர்களாகவும் இருக்கும் எங்கள் மாவட்டச் செயலாளர்கள் அம்மாவின் ஆணைப்படி தங்கள் கடமையை நியாயமாகச் செய்தார்கள். இப்படி வழக்குகள் பதிவு செய்யப்பட்டாலும் தேர்தலில் மீண்டும் நிற்க தடையேதுமில்லையே'' என்கிறார் அ.தி.மு.க. பிரமுகரும், தமிழக அரசின் தில்லி பிரதிநிதியுமான மைத்ரேயன்.

"வழக்குகளைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். கட்சியின் வெற்றிக்காக புதிய யுக்திகளுடன் வாருங்கள்'' என்று சம்பந்தப்பட்ட அமைச்சர்களுக்குத் தலைமை சொல்லியிருப்பதாகக் கிசுகிசுக்கிறது அ.தி.மு.க. வட்டாரம்.'



* சி.வி. சண்முகம்



* எம். ராதாகிருஷ்ணன்



* பி.சி. ராமசாமி

இதற்கிடையில் வழக்குகள் பதிவு செய்யப்பட்டுள்ள அமைச்சர்கள் மீது நீதிமன்ற மேல் நடவடிக்கை எடுக்கப்பட வேண்டுமானால் ஆளுனரின் முன் அனுமதி வேண்டும் என்று சிலரும், "இல்லையில்லை. மக்கள் பிரதிநிதித்துவ சட்ட அடிப்படையில் வழக்கு பதிவு செய்தால் அனுமதி தேவையில்லை'' என்று சிலரும் வாதிடுகின்றனர். "அமைச்சர் ஒரு பொது ஊழியர் என்ற அடிப்படையில் அவர் மீது வழக்குப் பதிவு செய்து மேல்

# தலைவலி!



நடவடிக்கை தொடர ஆளுனரின் முன் அனுமதி வேண்டும். பொது ஊழியரான அமைச்சரின், பொறுப்புகள், கடமைகள் பற்றி கட்சி ரீதியாகவும், நிர்வாக ரீதியாகவும் தனித்தனியாக எதுவும் பகுத்து வைக்கப்படவில்லை. எனவே கட்சி சார்பான நடவடிக்கைகள் தொடர்பாக வழக்குப் பதிவு செய்யப்பட்டாலும் நீதிமன்ற நடவடிக்கை தொடர ஆளுனரின் அனுமதி பெற வேண்டும்'' என்று சொல்கிறார் பிரபல வழக்கறிஞர் சந்த்ரு. இந்த வழக்குகள் நீதிமன்றத்தில் நிரூபிக்கப்பட்டால் அதிகபட்ச தண்டனை ஒரு வருடம்.

''ஆனால் வழக்குகள் விரைவாக நடத்தி முடிக்கப்பட வேண்டுமே'' என்று கவலைப்படுகிறார் உந்துனர் அறக்கட்டளை நிறுவனரும், முன்னாள் ஐ.ஏ.எஸ். அதிகாரியுமான அ.கி. வேங்கடசுப்பிரமணியன். ''சென்னை மாநகராட்சி தேர்தலில் வாக்கு எண்ணிக்கையின்போது கோல்மால், குளறுபடிகள் நடந்தன. அதையொட்டி வழக்குப் போட்டோம். வழக்கு இன்னமும் இழுத்தடித்துக் கொண்டிருக்கிறது. மாநகராட்சியின் பதவிக் காலமே முடியப் போகிறது. இப்படிப்பட்ட சூழலில், அமைச்சர்கள்மீது பதிவு செய்யப்பட்ட வழக்குகளில் தீர்ப்பு எப்போது வரும் என்று தெரியாது. ஆனால் இப்படி வழக்குகள் பதிவு செய்யப்பட்டிருப்பது மிகவும் வரவேற்கத்தக்கதே! ஏனென்றால் எதிர்காலத்தில் மொத்தமாக போலி மனுக்கள் தாக்கல் செய்ய பயம் வருமே'' என்கிறார் வேங்கடசுப்பிரமணியன்.

இதற்கிடையில் வழக்குப் பதிவு செய்யப்பட்டுள்ள ஆறு அமைச்சர்களையும் தேர்தலில் நிற்க விடாமல் தடுக்க, ஏதேனும் சட்டப்பிரிவு இருக்கிறதா என்று தி.மு.க ஆராய்ந்து வருவதாகத் தெரிகிறது. அதே நேரத்தில் இவர்களைக் கழற்றி விடுவதன் மூலம் பொது மக்களின் நல்லெண்ணத்தைப் பெற வாய்ப்பு இருக்கிறதா என்று அ.இ.மு.க. தலைமையும் ஆராய்ந்து வருவதாகவும் சொல்கிறார்கள்!

- ப்ரியன்




## வெள்ளிவிழா ஆண்டில் வீழ்ச்சி!

**வெ**ள்ளி விழா ஆண்டினைக் கொண்டாடிக் கொண்டிருக்கும் பாரதிய ஜனதா கட்சியின் நிலைமை பெருமிதத்துக்குரியதாக இல்லை.

முதல் சில ஆண்டுகளில் அக்கட்சி விறுவிறுவென்று முன்னேற்றம் கண்டது. வேர் கட்சியான ஜனசங்கின் கட்டுக்கோப்பும் கௌரவமும் அதனிடத்திலும் இருந்தன. உட்கட்சி ஜனநாயகம் தழைத்தது. ஆனால், இப்போது எல்லாமே தலைகீழ்!

தலைவர் அத்வானியின் பதவிக்காலம் முடிவுற சில தினங்களே இருக்கும் நிலையில், கட்சியின் அடுத்த தலைவர் யார் என்பது முடிவாக அறிவிக்கப்படாமலே இருக்கிறது! பா.ஜ.கவில் கடைப்பிடிக்கப்பட்டு வந்த உட்கட்சி ஜனநாயகம் தொலைந்து போய்விட்டதால், நியமன தலைவர் ராஜ்நாத் சிங் குறித்து அதிருப்தி நிலவுகிறது. அவரை முழுப் பதவிக் காலத்துக்கும் அமர்த்தாமல் இடைக்காலத் தலைவராக நியமிக்கும் அபத்த யோசனை வலம் வருகிறது.

விடைபெறும் தலைவர் அத்வானியும் தமது பதவியை முழுமனத்துடன் விட்டு விலகுவதாக இல்லை! "நாடாளுமன்ற பா.ஜ.க தலைவராகத் தொடர்வேன்"



கல்கி



2006 ஜனவரி 8
பார்த்திப மார்கழி 24
மலர் : 64
இதழ் : 23




என்கிறார். "பெட்டி கொள்ளை போனாலும் சாவி என்னிடம்தான் உள்ளது" என்பது போலிருக்கிறது!

அரசியலில் பா.ஜ.க தீவிரமாக இறங்கியபோது காங்கிரஸுக்கு ஒரு சிறந்த மாற்றுக்கட்சி தோன்றிவிட்டதாக அரசியல் நோக்கர்கள் மகிழ்ந்தார்கள். இந்திய ஜனநாயகம் ஆரோக்கியமாக வளர்ச்சியுறும் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால், பா.ஜ.க, ஆர்.எஸ்.எஸ் - வி.எச்.பியின் ஆதிக்கத்திலிருந்து விடுபடும் துணிவு பெறாததால் மதவாத கட்சியாக முத்திரை பெற்றது. ஆர்.எஸ்.எஸ், வி.எச்.பி, இதர பரிவார் அமைப்புகளின் பிடியில் சிக்கி, பாப்ரி மஸ்ஜித் தகர்ப்பு போன்ற கோர நிகழ்வுக்குக் காரணமாயிற்று. பரிவார் அமைப்பினரும் சேவக்குகளும் பா.ஜ.கவுக்குள் ஊடுருவிவிட்டார்கள். மத்தியில் ஆட்சியில் இருந்தபோதுகூட பா.ஜ.க ஹிந்து அடிப்படைவாதத்தை ஆதரித்து ஊக்குவித்தது.

இன்று ஆர்.எஸ்.எஸ் அமைப்பின் செல்லப்பிள்ளையான சஞ்சய் ஜோஷி பா.ஜ.கவின் 'நிர்மாணச் செயலாளர்' என்ற பொறுப்பிலிருந்து விலகுகிறார் - அவர் பேரில் பாலியல் குற்றச்சாட்டு சுமத்தப்பட்டிருப்பதால்!

பொதுவாழ்வில் தூய்மை, தியாகம் போன்றவற்றை முதன்மையாக வலியுறுத்திய பா.ஜ.கவில் இப்படியொரு சீர்கேடு ஏற்படும் என்று பதினைந்திருபது ஆண்டுகளுக்கு முன்பு யார் எதிர்பார்த்திருப்பார்கள்!

கட்சி எத்தனைக்கெத்தனை வேகமாக வளர்ந்ததோ அத்தனைக்கத்தனை வேகமாக வீழ்ந்திருக்கிறது.

உமாபாரதி போன்ற அதிருப்தியாளர்கள் இக்கட்சியில் மாநிலத்துக்கு மாநிலம் மலிந்து விட்டார்கள்.

நாடாளுமன்றத்தில் கேள்வி எழுப்புவதற்கு லஞ்சம் வாங்கிய பதினொரு எம்.பிக்களுள் ஆறு பேர் பா.ஜ.கவினர்!




இவர்களுடைய பதவியைப் பறிக்கலாகாது என்பது பா.ஜ.க தலைவர் அத்வானியின் வாதம். இந்த வாதத்தை ஏற்காமல் நாடாளுமன்றத்தின் ஒட்டுமொத்த முடிவை ஏற்று ஆதரிக்க வேண்டும் என்கிறார் ஜஸ்வந்த் சிங். இந்த வேறுபாடு பகிரங்கமாகப் பதிவாகியுள்ளது.

பாப்ரி மஸ்ஜித் தகர்ப்பு வழக்கில் பா.ஜ.கவின் முன்னணி தலைவர்கள் பேரில் குற்றம் சாட்டப் பெற்று, வழக்கு நிலுவையில் உள்ளது.

வெள்ளிவிழாவையொட்டிய தேசிய செயற்குழு கூட்டத்தில் அரசின் அயலுறவுக் கொள்கையைக் கடுமையாக விமர்சித்து தீர்மானம் எழுப்பப்படுகிறது. "இவ்வளவு கடுமையாக விமர்சிப்பதற்கு முன்பு நாம் முதலில் விவாதிப்போம்; எந்த விவாதமுமின்றி இப்படியொரு கண்டன தீர்மானம் நிறைவேற்றலாகாது" என்று வாஜ்பாய் எச்சரிக்கிறார். அறிவுபூர்வமான அவரது அரசியல் அணுகுமுறையை யாரும் ஏற்பதாக இல்லை!

மொத்தத்தில் உட்கட்சி ஜனநாயகம் போய்விட்டது; லஞ்ச - ஊழல் மலிந்துவிட்டது; அடிப்படைவாதம் பெருகிவிட்டது.

இந்நிலையில், "பா.ஜ.க சரித்திரம் படைத்திருக்கிறது. இந்திய அரசியலில் இரு கட்சி ஜனநாயகத்துக்கு வழி வகுத்திருக்கிறது" என்று வெள்ளிவிழா முழக்கமாக அத்வானி பேசியுள்ளது சிரிப்பையே ஏற்படுத்துகிறது.

காங்கிரஸுக்கு ஒரு நல்ல மாற்று, அல்லது காங்கிரஸைவிடச் சிறந்த கட்சி என்று கூறும் அளவுக்கு, இன்று பா.ஜ.கவிடம் என்ன இருக்கிறது ?!

இந்த வெள்ளிவிழா ஆண்டில் பழைய பண்புகளை மீட்டு உட்கட்சி ஜனநாயகம் தழைக்கச் செய்வதுடன் பரிவார் அமைப்புகளின் பிடியை உதறிவிட்டுச் செயல்பட பா.ஜ.க முடிவெடுத்துச் செயல்பட்டால் மீண்டெழ வாய்ப்பு உண்டு. இல்லையேல் கட்சியின் வீழ்ச்சி இன்னும் வேகமாகத் தொடரும். ○

சூப்பர்டென் ஆர்த்தியுடன் ஒரு காமெடி டைம் :

**கா**மெடி ஸ்க்ரிப்ட் எழுதறதா கேள்விப் பட்டோமே...

ஆமா... நிறைய எழுதிட்டேன். அதை டிராமாவா எடுக்கணும். ஆனா கையில துட்டு இல்லாததால ஒரு சூப்பர் புரொடியூசரைத் தேடிட்டு இருக்கேன். மாட்டினா பட்டை யைக் கிளப்பிடலாம்.

*உங்க நிகழ்ச்சியின் பேரை காமெடி டைம்னு மாத்திட்டா என்ன...*

ஓ.... ஷ்யூர்... ஆனா காமெடி டைமோட பேரை சூப்பர்டென்னுனு நடத்தணும்...ஓகேவான்னு கேட்டுச் சொல்லுங்க...

*உங்களுக்கு ஒரு பட்டப் பெயர் உண்டாமே?*

ஓ... அது உங்கக் காதுக்கும் வந்தாச்சா... என்னோட பட்டப் பெயர் குண்டுத் தக்காளி... போதுமா...?

*உங்களோட கெட்டப்பைப் பார்த்து என்னிக்காவது சிரிச்சதுண்டா...*

இல்ல... ஆனா நிறைய தடவை பயந்தும் இருக்கேன். வேப்பிலை அடிக்கிற அளவுக்குப் பயமுறுத்தியும் இருக்கேன். (என்று சொல்லிவிட்டு கொடுத்த 'போஸ்'கள் இவை)

*உங்களுக்குப் பிடிச்ச காமெடியன்ஸ்?*

நாகேஷ் சார் மற்றும் மனோரமா ஆச்சி. இந்த ஃபீல்டுல ஆச்சிக்கு அப்புறம் இந்த



# ஆச்சிக்கு அப்புறம் ஆர்த்திதான்!

ஆர்த்திதான்னு இந்த உலகம் தெரிஞ்சுக்கப் போற நாள் ரொம்ப தூரத்துல இல்ல... ஹா...ஹா...ஹா...

*சமீபத்துல படிச்ச எஸ்.எம்.எஸ். ஜோக்...*

ம்... எவ்வளவுதான் திறமையான டான்ஸ் மாஸ்டரா இருந்தாலும் அவரோட சாவுக்கு அவரால ஆட முடியாதே... இதுதான் வாழ்க்கை!

*அவின் காமெடியில கலக்குறாங்க இல்லே?*

ஹலோ...ஹலோ... என்ன என்னை ஓட்டுறிங்களா? அவினோட காமெடி டீச்சரே நான்தான்...!

*ஆமா...நீங்க பல்லாண்டு காலமா கலெக்டர் ஆகப் போறதா பீட்டர் விட்டுட்டு இருக்கீங்க. எப்போதான் கலெக்டராகப் போறீங்க...?*

யாரைப் பார்த்து பீட்டரிங் பார்ட்டின்னீங்க. இதுக்குப் பதிலை அடுத்த வருஷம் நீங்களே தெரிஞ்சுக்குவீங்க. இதுக்கு மேலே நான் எதுவும் சொல்லப் போறதில்லை.

ஆத்தி...

**- மொக்கச்சாமி**

படங்கள் : **ஸ்ரீஹரி**

# ரஜினி செய்த காமெடி!

**'சிவாஜி' இணை தயாரிப்பாளர் எஸ். பி.முத்துராமன் 'சிவாஜி' யூனிட்டிலுள்ள அத்தனை பேர் வாயிலும் ரகசிய பிளாஸ்டர் ஒட்டியிருக்கிறார் இயக்குனர் ஷங்கர். 'சிவாஜி'யின் இணை தயாரிப்பாளராக நியமிக்கப்பட்டிருக்கும் ரஜினி மற்றும் ஏவி. எம்.மின் ஆஸ்தான இயக்குனரான எஸ்.பி. முத்துராமன் நம்மிடையே 'சிவாஜி' பற்றியும் ரஜினி பற்றியும் சில விவரங்களைப் பகிர்ந்து கொண்டார்.**

"நானும் ரஜினியும் இறுதியாக இணைந்த படம் 'பாண்டியன்'. பத்து வருடங்கள் ஓடிவிட்டன. நான் இப்பொழுது ஃபீல்டிலேயே கிடையாது. ஆனால் என்மீது மிகுந்த மரியாதை வைத்து சிவாஜியிலும் என்னை இணைத்துள்ளனர். இப்பொழுது ஏவி.எம்.மில் எனக்காகத் தனி அறை ஒதுக்கியுள்ளனர். இது வியாபார ரீதியான பந்தம் கிடையாது. என்னால் என்ன பெரிதாகப் பலன் கிடைத்துவிடப் போகிறது. ஒன்றும் இல்லை. இந்த விஷயத்தில் ஏவி.எம்., ரஜினி இருவரிடமும் நான் பார்ப்பது மனித நேயத்தைத் தான்.

ஏவி.எம்., ரஜினி, ஷங்கர், ரஹ்மான் என நான்கு மாபெரும் தூண்கள் இணையும் மகத்தான படமிது. ஷங்கர், ரஜினியைப் போலவே ரசிகர்களின் ரசனையை நன்கு அறிந்தவர். மிகப் பிரம்மாண்ட வெற்றியைப் படைக்கும்வரை இந்த யூனிட்டின் கண்கள் தூங்காது.

இன்று என்னைப் பல்வேறு விழாக்களுக்கும், பல இடங்களுக்கும் ஏன் அழைக்கிறார்கள்? இவர் ஏவி.எம்.க்கும் ரஜினிக்கும் ஏராளமான வெற்றிப் படங்களை அளித்தவர் என்கிற காரணத்தினால்தானே!



'ஆளுக்கொரு ஆசை' என்றொரு படம். அதில் ஒரு சிறு வேடத்தில் நடிக்க ரஜினி முதன்முறையாக என்னைச் சந்தித்தார். அன்று அவரிடம் வெளிப்பட்ட வேகம், ஆர்வம், ஈடுபாடு அனைத்தும் என்னையும் பஞ்சு அருணாசலத்தையும் அசர வைத்தன. இப்பேர்பட்டவருக்கு சாதாரண வேடம் அளிப்பது மிகத் தவறு என்றெண்ணிக் கொண்டு 'புவனா ஒரு கேள்விக்குறி'யில் கதாநாயகனாக்கி அழகு பார்த்தோம். ரஜினியின் சினிமா ஈடுபாடு யாரையும் மலைக்க வைக்கும். இரவு ஒரு மணிக்கு எழுப்பி "சார், அந்த ஸீன் அப்படிப் பண்ணலாமா, சரியா இருக்குமா, இன்னும் நகைச்சுவையாகப் பண்ணலாமா என்பார்" என்றவர் படப்பிடிப்பின்போது ரஜினி செய்த சில குறும்புகளைச் சொல்ல ஆரம்பித்தார்.



* ரஜினியுடன் எஸ்.பி.எம்.

"ஆக்ஷன் ஹீரோவாக இருந்தாலும் எதையுமே நகைச்சுவையாகச் சொல்ல நினைப்பார் ரஜினி.

'மனிதன்' படத்துக்காக மொத்த யூனிட்டும் ஊட்டிக்குக் கிளம்பியது. ரஜினிக்குத் தனி கோச்சில் இடம் கிடைத்தது. உதவிக்கு முத்தப்பா என்கிற ஒப்பனையாளர் கூட இருந்தார். முத்தப்பா எங்களிடம், 'அரக்கோணம் வந்தபிறகு நான் ரஜினி சாருக்கு பிரியாணி வாங்கிக் கொடுத்து விடுகிறேன். கவலை வேண்டாம்' என்று உறுதியளித்தார். நாங்களும் அவரவர் 'கோச்'சுக்குச் சென்று விட்டோம். ஆனால் வண்டி கிளம்பியவுடனே நித்திரையில் ஆழ்ந்து விட்டார் முத்தப்பா. இறுதியில் வேறு வழியின்றி அரக்கோணத்தில் ரஜினி வண்டியை விட்டு இறங்கி முத்தப்பாவுக்கு உணவு வாங்கி அவரை எழுப்பி சாப்பிட வைத்திருக்கிறார். நிலைமை தலைகீழானதில் முத்தப்பா நொந்து விட்டார்.

'ராணுவ வீரன்' படப்பிடிப்பின்போது ரஜினி கெஸ்ட் ஹவுசில் ரசிகர்கள் சூழ்ந்து விட்டனர். அங்கு பாதுகாப்புக்கு இருந்தது, இதே முத்தப்பாதான். ரஜினியை மொய்க்க வந்த ரசிகர் கூட்டத்தில் சிக்கி முத்தப்பா மாட்டிக் கொண்டார். ஆள் காணவில்லை என்று பதறிப்போன ரஜினி பின்னர் கூட்டத்தை ஒழுங்குபடுத்தி அவரை மீட்டிருக்கிறார். 'முத்தப்பா, என்னைப் பாதுகாக்க வந்த மாதிரி தெரியலையே. நான்தான் உங்களைப் பாதுகாக்க வேண்டியிருக்கே' என்று பின்னர் அவரைப் பயங்கரமாக ஓட்டினார் ரஜினி" என்று ரிலாக்ஸானவரிடம் மீண்டும் சிவாஜி பற்றிக் கேட்டோம்.

"ரஜினி, ஒரு படம் ஆரம்பித்தாலே இண்டஸ்ட்ரியே குஷியாகி விடுகிறது. ஹைதராபாத்தில் 'சிவாஜி' செட்டில் ரஜினியைச் சந்தித்தேன். நானும் சிவாஜி டீமில் பங்கெடுத்துக் கொண்டது பற்றி மிகவும் உணர்ச்சிவசப்பட்டார். 'பெரிய வெற்றி பெறுவோம்' என்று வாழ்த்தினேன். நான் ஏன் மீண்டும் ரஜினியை வைத்து இயக்குவதில்லை என்று பலரும் கேட்கிறார்கள். எங்கே, அவரே இரண்டு வருடங்களுக்கு ஒரு படம்தானே செய்கிறார். ரஜினி, இப்பொழுது பொதுச் சொத்தாகிவிட்டார். இனி அவர் தொடர்ந்து படம்பண்ணவில்லையென்றால் அவரை விடமாட்டோம்" என்று நெகிழ்ந்தார்.

அடுத்த படம் பற்றிக் கேட்டால் "நல்ல தயாரிப்பாளர், நல்ல யூனிட் கிடைத்தால் பண்ணலாம். ஆனால் இப்போதைக்கு என் கவனமெல்லாம் சிவாஜிமீதுதான்'' என்றார்.

**- இரண்டாம் சந்திரமுகி**

படம் : **ஓம்**



# இரத்த அழுத்தம், கொலஸ்ட்ரால், மாரடைப்பு, இருதய வால்வு குறைபாடு, இருதய ஓட்டைகள் போன்றன வராமல் தடுக்க எளிய இயற்கை மருத்துவம்!

## பத்தியம் கிடையாது. பக்க விளைவு கிடையாது

இதயம் என்பது பிறப்பிலிருந்து இறப்பு வரை இடைவிடாது மற்ற உறுப்புகளுக்கு இரத்தத்தை பாய்ச்சும் ஒரு பம்ப் (PUMP) ஆகும். இதயம் வேலை செய்வதற்கு, அதற்கும் இரத்தம் தேவைப்படுகிறது. இவ்வாறான இதயத்தில் நம்முடைய தவறான வாழ்க்கை முறையால் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை இதய வால்வுகள், ASD, VSD என்று சொல்லக்கூடிய இதய அறைகளில் ஓட்டைகள், இரத்தக் குழாய்களில் அடைப்பு போன்ற குறைபாடுகளால் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். இவ்வாறான நோய்கள் ஏன் ஏற்படுகின்றன என்பது பற்றி நாம் தெரிந்துகொண்டு, அதற்குத் தகுந்தாற்போல், எவ்வித பின் விளைவுகளும் இல்லாத தெய்வீக மூலிகை மருந்துகள், இயற்கை உணவுகள், வாழ்க்கை சீரமைப்பு மூலம் குணம் பெறலாம்.

இதய நோய்க்கான காரணங்கள் : கர்ப்ப காலத்தில் தாய் உட்கொள்ளும் வீரிய மிக்க இரசாயன மருந்துகள், சக்தியான உணவுகள் கிடைக்காமை, அடிக்கடி நோய்வாய்ப்படுதல், X-RAY எடுத்தல் போன்ற காரணங்களால், குழந்தைகளுக்கான – பிறவி குறைபாடுகளும், புகைத்தல், மது வகைகள், B.P. SUGAR போன்றவற்றால் இதய தசைகளில் கோளாறுகளும், அதிக எடை, தொப்பை, TENSION & STRESS உள்ளவர்கள், வாழ்க்கையில் நிதானம் அற்றவர்கள், சோம்பேறிகள், அதிகம் கோபப்படுபவர்கள், கொழுப்பு சத்துள்ள உணவுகள் உட்கொள்பவர்களுக்கு மற்றும் LIPOPROTEIN 'A' என்கின்ற கொழுப்புச்சத்து தீமைகளினால் மாரடைப்பும், எதிர்ப்பு சக்தி இல்லாத காரணத்தாலும், சக்தியான உணவுகள் கிடைக்காததாலும் ஸ்ட்ரெப்டோகாக்கஸ் என்னும் கிருமிகளால் இதய வால்வுகளும் – பாதிக்கப்படுகின்றன.

இதய நோய்க்கான அறிகுறிகள் : நெஞ்சுவலி, மூச்சிரைப்பு, படபடப்பு, வியர்த்தல் போன்றவை இதய நோயின் பொதுவான அறிகுறிகள் என்றாலும், அவை பாதிப்புக்குள்ளான பகுதியை பொறுத்து அதன் அறிகுறிகள் தெரிய ஆரம்பிக்கும். மூச்சுத்திணறல், உடலெல்லாம் நீல நிறமாக மாறுதல் போன்றவை பிறவி குறைபாடுகளிலும், மூட்டுக்களில் வீக்கம், மூட்டுவலி, கை, கால் வலி, காய்ச்சல், வறட்டு இருமல் போன்ற அறிகுறிகள் இதய வால்வுகள் பாதிக்கப்படும் போதும், மார்பு பகுதியில் எரிச்சல், நெஞ்சுவலி, வியர்த்தல், நெஞ்சு படபடப்பு, இடது தோள்பட்டையில் வலி, மூச்சுத் திணறல், உடல் சோர்வு, திடீர் மயக்கம், நாடி துடிப்பு மற்றும் இரத்த அழுத்தம் குறைதல் போன்ற அறிகுறிகள் மாரடைப்பு ஏற்படும் போது காணப்படும்.

இதய நோயாளிகளுக்கான தெய்வீக மூலிகைகள் : வேப்பிலை, வில்வம், துளசி, அத்தியிலை, அருகம்புல், வெந்தயம், நெல்லிக்காய், கடுக்காய், ஆவாரம்பூ, தூதுவளை, தும்பை, செம்பருத்தி, தாமரை, மருதம்பட்டை போன்றவைகள் பொடி செய்து, பின் சம அளவில் ஒன்றாக கலந்து ஒரு பாட்டிலில் வைத்துக்கொள்ளவும். பின் இதில் இருந்து ஒரு ஸ்பூன்தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு ஒரு மணி நேரம் முன்பாக தினம் காலை, பகல், இரவு ஆகிய மூன்று வேளையும் சுமார் மூன்று மாதம் முதல், ஆறு மாதம் வரை உட்கொள்ளவும். இந்த மூலிகைகளில் உள்ள சக்திகள் இதயம் நன்றாக சுருங்கி விரியவும், இதயத்தை தொற்று நோய்களில் இருந்து காப்பாற்றவும் உதவுகின்றன.

இதய நோயாளிகள் பின்பற்ற வேண்டிய உணவு முறைகள் : இந்நோயாளிகள் தினம் காலை அல்லது இரவு ஒரு வேளை பச்சையாக உட்கொள்ளும் பழங்கள், காய்கறிகள் தேவையான அளவு பழ ஜூஸ்கள், Vegetables Salads, Fruit Salads, போன்றவைகளை உட்கொள்ள வேண்டும். மற்ற இரண்டு நேரம் வழக்கமான சமைத்த சைவ உணவுகளை மட்டும் உட்கொள்ள வேண்டும். சமைத்த உணவுகளிலும் வறுத்த, பொரித்த உணவுகளையும் ஊறுகாய், அப்பளம், வனஸ்பதி, நெய், ICECREAM, சாக்லேட், தயிர் போன்றவைகள் தவிர்க்க வேண்டும். சமைத்த உணவுகளையும், சமைக்காத உணவுகளையும் சேர்த்துண்ணக் கூடாது. இவைகளை 2 அல்லது 3 மணி நேர இடைவெளிகளில் தான் உட்கொள்ள வேண்டும்.

உடற்பயிற்சிகள் : இந்நோயாளிகள் தினம் காலை மாலை 20 - நிமிடம் இயன்ற வரை எளிய உடற்பயிற்சிகள் செய்தல்வேண்டும். நடத்தல், கை கால் விரல்களை நீட்டி மடக்குதல், குனிந்து நிமிர்தல், உட்கார்ந்து எழுதல், முடிந்தால் சைக்கிள் ஓட்டுதல், மூச்சுப்பயிற்சிகள் போன்றன செய்தல் வேண்டும்.

**ஒவ்வொரு மாதமும்**

| தேதி | ஊர் |
|---|---|
| 2 | வேலூர் |
| 2 | காஞ்சிபுரம் |
| 4 | கடலூர் |
| 4 | விழுப்புரம் |
| 4 | திருவண்ணாமலை |
| 7,8 | மும்பை |
| 9 | பெங்களூர் |
| 12 | சேலம் |
| 12 | ஈரோடு |
| 12 | திருப்பூர் |
| 13 | கோவை |
| 13 | உடுமலைபேட்டை |
| 14 | மதுரை |
| 14 | திருநெல்வேலி |
| 15 | விருதுநகர் |
| 15 | தஞ்சாவூர் |
| 16 | திருச்சி |
| 16 | கரூர் |
| 20,21 | புது டெல்லி |

டாக்டர் C.K. மாணிக்கவாசகம் அவர்களால் 34வருட அனுபவ ஆராய்ச்சியில் எழுதப்பட்ட "எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்" என்ற நூலினை பதிவுத்தபாலில் பெற ரூ. 120/-ம், "என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்" என்ற புதிய நூலினை பதிவுத் தபாலில் பெற ரூ.120/- ம் தலைமை முகவரிக்கு M.O. அனுப்பவும். மேலும் விவரங்களுக்கு:

Dr. M.குருபரன் & Dr. M. சபாபதி, S/O. Dr. C.K.மாணிக்கவாசகம்

**CKM தெய்வீக மூலிகை மையம்**

**CKM DIVINE HERBAL CENTRE**

தலைமை முகவரி : P.B. NO. 30, 1,திருநாத முதலி நகர் (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர் டி: 635601

✆:04179-220469, 222769 செல் : 94441 61670, 94444 07638

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் டவர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை – 600 010. ✆ : 044-26424285, 26427638. செல் : 9444001447

மேலே உள்ள முகவரிகளில் ஆலோசனை தினமும் நேரம் காலை 10.00-1.00 p.m. மாலை 5.00-7.00 P.M.

# தாயினும் சாலப் பரிந்து...



ஆர்.கே.ஸ்ரீராம்குமார்

சென்னை ஐ.ஐ.டியில் 'மார்டிகிரா' மாணவர் திருவிழா. அதில் அம்மா கச்சேரி பண்ணுகிறார். கல்யாணி ராகத்தை அசாத்தியமாக ஆலாபனை பண்ணி விட்டு 'பஜரே ரேர்சித' கீர்த்தனை பாடுகிறார். மாணவர்கள் கட்டுண்டு போய்க் கேட்கிறார்கள். பின்னிரவு நேரத்தில் கச்சேரி முடிந்து வீடு திரும்புகையில் காரில் குழுவினர் ஒன்றாகப் பயணம் செய்கிறோம். அம்மா எனக்குப் பரிவோடு சொல்லித் தருகிறார்: "கல்யாணி வாசிக்கறச்சே 'ரி'யை ரொம்ப அசைக்காதே... சங்கராபரணம் மாதிரி கேட்கும்."

இது ஒரு வயலின் கலைஞனுக்குத் தெரிந்திருக்க வேண்டிய மிக அடிப்படையான விஷயம். ஆனால், அன்று கவனம் செலுத்தாமல் வாசித்துவிட்டேன் "இது கூட தெரியாதா?" என்று என்னை அம்மா கடிந்து கொண்டிருந்தால் தகும். ஆனால் அவர் ஒரு குழந்தைக்குப் பால பாடம் கற்றுத்தரும் பரிவோடும் பொறுமையுடனும் எனக்குக் கற்றுத் தந்தார்!

அதுதான் அம்மா! பக்கவாத்திய கலைஞர்களை அப்படி ஒரு கௌரவமாக நடத்துவார். அவர்களுடைய நலனில் அத்தனை அக்கறை; அவர்களுடைய ஏற்றத்தில் அப்படியொரு சந்தோஷம். அவர் கச்சேரி என்றாலே எல்லோருக்கும் அலாதியான உற்சாகம் வந்துவிடும்.

இந்த உற்சாகம் ஒரு போனஸ் என்றால் அம்மாவின் கச்சேரிகளே பக்கவாத்தியக் கலைஞர்களுக்குப் பெரிய சன்மானம்தான்.

முக்கிய கச்சேரிகளுக்கு ஒத்திகை பார்ப்பதும், சின்ன சின்ன விஷயங்களில் கவனம் செலுத்தி அனைவரது பங்கேற்பையும் மெருகேற்றி, கச்சிதப்படுத்தி மேடையில் வழங்குவதும் அம்மாவின் பாசறையில் விமரிசையாக நடந்தது. அப்படி ஒவ்வொரு கச்சேரிக்கும் ஒலிப்பதிவுக்கும் நடந்த ஒத்திகையும் அதன் விளைவாக மேடையில் மலர்ந்த ஒத்திசைவும் வாழ்நாள் முழுவதும் மறக்க முடியாத அனுபவங்கள்.

அம்மாவுக்கு வாசித்தபோது விளைந்த ஆனந்தம் எதனால் ஏற்பட்டது என்று யோசிக்கிறேன்...



• எம்.எஸ். கச்சேரியில் ஆர்.கே.ஸ்ரீராம்குமார் வயலின்

அவர் தமது இரண்டு தம்பூராக்களுக்குச் சுருதி சேர்க்கும் அழகே தனியாய் இருக்கும். எவ்வளவு சிரத்தையாய் அவற்றைப் பராமரித்து வைத்துக் கொண்டிருந்தார்! அந்த லக்ஷ்மி-சரஸ்வதி தம்பூராக்கள் சேர்ந்து ஒலிக்கிறபோது கங்கை ஜலம் போல் ஸ்படிக சுத்தமாய் இருக்கும். அதிலேயே நம் பிராணனை விட்டு விடலாம் என்கிற அளவுக்கு ஒரு நிறைவு கண்டுவிடும். அதன் பிறகு அம்மாவின் குரல் அவற்றோடு இழைந்து ஒலிக்கிற போதோ, பிராணனை மீட்டு எடுத்து வந்து அந்த சங்கீதத்தை அனுபவித்துக் கொண்டே இருக்கத் தோன்றும்! அவரிடம் இருந்தது சுருதி சுத்தத்துக்கும் மேலான சுருதி பிரக்ஞை. அந்தப் பிரக்ஞை அப்படியே கச்சேரி மேடையை நிறைத்து பக்கவாத்தியக் கலைஞர்களையும் ஆட்கொண்டுவிடும். அப்புறம் அவரையே பின் தொடர்ந்து நாங்கள் செல்ல வேண்டியதுதான்!

இவ்வளவு சுருதி பிரக்ஞை இருந்த போதும், கச்சேரிக்குக் கிளம்புவதற்கு முன் தம்பூராக்களைச் சேர்த்துக்கொண்டு சில நிமிடங்கள் மாயாமாளவகௌளை, சங்கராபரண ஸ்வர வரிசைகளைப் பாடிப் பார்த்துக் கொள்வார். அப்போதே நிகழ்ச்சிக்கான அலைவரிசை 'செட்' ஆகிவிடும். மேடையேறி, திரை தூக்கப்படுவதற்கு முன் இன்னுமொரு பத்து நிமிடம் வெறுமே இரண்டு தம்பூராக்கள் மட்டும் மீட்டப்பட்டு ஒலித்துக் கொண்டிருக்கும். மேடையில் இருக்கும் நாங்கள் மட்டுமல்லாது அரங்கத்தில் அமர்ந்திருக்கும். ரசிகர்களும் சுருதியில் தோய்ந்துவிடுவார்கள்.

திரை தூக்கப்படும் கணத்தில் அம்மா கூப்பிய கரங்களுடன் அமர்ந்திருப்பதைப் பார்த்ததுமே ரசிகர்கள் பரவசமாகிவிடுவார்கள். அவர் தோற்றத்திலும் அலங்காரத்திலும் அவ்வளவு கௌரவம் விகசித்திருக்கும். உடுத்தும் நிறங்களின் தேர்வு, அணியும் நகைகளின் அடக்கமான அழகு, மலர்களைச் சூடும் விதத்தில் காணப்படும் வினயம் என்று சகல அம்சங்களும் கர்னாடக சங்கீதத்தின் சம்பிரதாயத்தையும் தெய்வீகத்தையும்



உள்ளடக்கிப் பிரதிபலித்துக் கொண்டிருக்கும்.

அவர் பாட ஆரம்பித்தாலோ, தேவலோகமே பூமியில் தென்படுவதாகத் தோன்றும்.. 'எந்த மாத்ரமுன' என்ற கீர்த்தனையை அனேகமாக எல்லா கச்சேரிகளிலும் பாடுவார். ஆனால் ஒவ்வொரு முறையும் அதைப் புதிதாகக் கேட்பதுபோல் அவ்வளவு பொலிவுடன் இருக்கும். கச்சிதமாகப் பாடுவதால் மட்டுமே ஏற்பட்டுவிடக் கூடிய பொலிவு அல்ல இது. கீர்த்தனைகளை இயற்றிய மகான்களின் உணர்வுக்கு அம்மா வழங்கிய மதிப்பு - மரியாதையால் விளைந்த பொலிவு. அப்படி மதிக்கப் படக் கூடிய கீர்த்தனைகளை மட்டுமே அவர் தேர்ந்தெடுத்துப் பாடினார்.

அந்தந்த கீர்த்தனைகளை வயலினில் அப்படியே வார்த்தை மாறாமல் நாமும் கொண்டு இம்மி கூட மாற்றாமல் வயலினில் வாசிக்க வேண்டும். (இதை நான் ரொம்ப கச்சிதமாகச் செய்தேன் என்று பெருமைபட்டுக் கொண்டுவிட முடியாது. ஆனால் இந்த முறையில் கற்றுக் கொள்ளும் அனுபவம் கிடைத்தது பெரிய பாக்கியம்தான்.)

'ஸ்ரீ கணபதி நீ'யைக் கற்றுத் தந்து கொண்டேயிருக்கையில் ஓர் இடத்தில் நிறுத்திச் சொன்னார்:

''இது எனக்கு பிருந்தாம்மா (டி. பிருந்தா) பாடம். இந்த இடத்தில் நான் மாற்றாமல் வைச்சுண்டிருக்கேன்... நீயும் அப்படியே வாசிக்கணும்...''

கற்றுக் கொண்ட பாடாந்தரத்துக்கு



''உங்க வீட்ல திருட்டு நடந்தப்ப ஏன் பக்கத்து வீட்டுக்காரரை உதவிக்குக் கூப்பிடலை?''

''அவர் போலீஸ் ஆச்சே!''

- அம்பை தேவா



வாசிக்க வேண்டும் - வாசிக்க வைத்து விடுவார் அம்மா.

ஒரு தீபாவளிக்கு மறுநாள். 'உனக்கு 'ஸ்ரீ கணபதி நீ' தெரியுமோ?' என்று கேட்டார். 'தெரியாது' என்று சொன்னதும் உடனே கற்றுக் கொள்ளும்படி பணித்தார்.

அவர் பாடப் பாட நானும் பாடிக் காட்டித்தான் கற்றுக்கொள்ள வேண்டும் - வயலினில் வாசித்து அல்ல! அப்படி வாய்ப்பாட்டாக கற்றுக் கொள்கிறபோது அவர் வார்த்தைகளுக்கு எங்கே வல்லினம் - மெல்லினம் கொடுக்கிறார்; மூச்சை எங்கே நிறுத்தி எங்கே விடுகிறார்... என்றெல்லாம் கவனித்துக் அத்தனை மரியாதை. நாங்களும் அப்படியே மதிக்க வேண்டும் என்று எதிர்பார்த்தார். இந்த நோக்கில் பல கீர்த்தனைகளைத் தாமே எனக்குக் கற்றுக் கொடுத்தார்.

எல்லோரும் சொல்வதுபோல் அம்மா கருவிலே திருவுடையவர் என்று நானும் நம்பத்தான் செய்கிறேன். ராஜ மாதங்கி மீனாக்ஷியின் அம்சம் அவருக்கு நிறையவே இருந்தது. ஆனால் அது மட்டுமே அவர் இசையின் மேன்மைக்குக் காரணம் அல்ல...

சங்கீதத்தை வசப்படுத்திக் கொள்ளவும் வழங்கவும் அவர் நிறையவே பரிசிரமப்பட்டிருக்கிறார். அந்த முயற்சியும்

பரிசிரமமும் இறுதிக்காலம் வரை அவரிடம் உறுதியாக இருந்தன. உயிரைக் கொடுத்துதான் ஒவ்வொரு பாட்டுக்கும் உழைத்திருக்கிறார்.

சங்கீதம் என்பது எதற்காக ஏற்பட்டது என்பதை முழுமையாகப் புரிந்து கொண்டு, பாடிய விதூஷி அவர். கச்சேரி செய்வதற்கென்று மட்டும் தோன்றிய கலை அல்ல சங்கீதம். இறையர்ப்பணமாக, உணர்வின் பரிமாற்றமாக உருவான வித்யை அது என அம்மா முழுமையாய் உணர்ந்திருந்தார், உணரவைத்தார். அதனால்தான் செவிக்கு மிக ரம்மியமாகவும் சிந்தனைக்கு விருந்தாகவும் விளங்கிய அவரது இசை, உள்ளத்தை உருக்கி, அந்தராத்மாவையும் தொட்டசைத்தது. அவர் ராகமோ கற்பனை ஸ்வரமோ பாடியபோது கூட ரசிகர்களின் கண்கள் பனித்தன. அவர் எங்கு பாடினாலும் அது தெய்வ சன்னிதானத்தில் பாடுவது போலவே ஒலித்தது.

இந்த இசைப் பண்பு அவருக்குப் பக்கவாத்தியம் வாசித்தவர்களிடமும் உருவாக அவர் தம்மால் இயன்ற அனைத்தையும் செய்தார்.

மேடையில் அளித்த உற்சாகம் ஒரு புறம் இருக்கட்டும்... எங்கள் தனிப்பட்ட வாழ்க்கையில், முன்னேற்றத்தில் அவர் காட்டிய ஆர்வத்தைச் சொல்ல வேண்டுமானால் 'தாயினும் சாலப் பரிந்து' என்று மாணிக்கவாசகரின் வார்த்தைகளால் மட்டுமே வர்ணிக்க முடியும்.

ரயில் / விமான பயணத்திலும் சரி, இசைப் பயணத்திலும் சரி, வாழ்க்கைப் பயணத்திலும் சரி.... பக்கவாத்தியக் கலைஞர்களைத் தம்முடன் கூடவே அழைத்துச் செல்வதில் அப்படியொரு தனியான மகிழ்ச்சி அம்மாவுக்கு. அத்தகைய தருணங்களில் நமது மகிழ்ச்சியை விட அவரது மகிழ்ச்சிதான் ஒரு படி மேலானதாக இருக்கும்.

'ஒரே ஒரு கச்சேரியாவது அவருக்கு வாசிக்க முடியுமா?' என்று நான் ஏங்கியதுண்டு... பல ஆண்டுகள் அவருக்கு வாசிக்கும் வாய்ப்பு இறையருளால் கிட்டியது. வாசித்த அந்த நாட்கள் திரும்ப வந்திடாதோ என்ற ஏக்கம் இப்போது வாட்டுகிறது! ●



மைக்ரோ சாஃப்ட்டோட
புதுக்கண்டுபிடிப்பு இது!



நாங்க காந்திய
கம்ப்யூட்டர்கள்!



எங்களுக்கும்
காஃபி பிரேக்!



அட, இப்படியும்
விளையாடலாம்!

தொகுப்பு:
வலைஞன்



மூளைக்கான
சாஃப்ட்வேரை
இன்ஸ்டால்
பண்ணிக்கலாம்!





உங்க மாமா
ஆப்பிரிக்காவிலிருந்து மெயில்
அனுப்பியிருக்காரு!

# புதுசா சிரிங்க!



நான் குளிப்பாட்டலைன்னா, இவன்
குளிக்கவே மாட்டான். நாட்டி பாய்!

டிஜிட்டல் மணிசட்டம்!



பாத்திரம் கழுவ
சுலபமான வழி!



சந்தைக்கு வந்திருக்கிற எரிபொருள்
செலவே இல்லாத நியூ மாடல் கார்!



அருள்வாக்கு



# நாம ரஸம்!

பலபேர் சேர்ந்து சளசளவென்று பேசிக் கொண்டிருக்கும்போது எல்லாரையும் ஸைலன்டாக இருக்கச் சொன்னால் அவர்களால் இருக்க முடிகிறதா? முடிவதில்லை. ஒரு நிமிஷம், இரண்டு நிமிஷத்துக்கப்புறம் ஒருத்தர் இரண்டு பேர் ரஹஸ்யம் பேசிக்கொள்ள ஆரம்பித்து, அப்புறம் எல்லாருமே அப்படிப் பண்ணி, ஒரு பத்து நிமிஷம் போனால், ரஹஸ்யம் என்பதும் நல்ல சத்தமாகவே ஆகிவிடுகிறது. மனஸின் எல்லா உணர்ச்சிகளையும் ஒரே வீச்சில் அடக்கப் பார்ப்பதும் இப்படித்தான் முடியும். அதுவே, ''ஸைலன்ஸ் ப்ளீஸ்'' என்று திரும்பத் திரும்பச் சத்தம் போட்டுக் கொண்டிருக்காமல்... (சிரித்தவாறு) ''ஸைலன்ஸ் ஸைலன்ஸ்'' என்றே சத்தம் போட்டுக் கொண்டிருக்காமல் - ''ராமா ராமா'', ''சிவ சிவா'' என்று ஏதோ ஒரு நாமாவை யாராவது ஒருத்தர் சொல்ல ஆரம்பித்தால், அதிலேயும் ராகம் தாளம் எல்லாம் சேர்த்து ரஸம் அதிகமாகும்படி பஜனையாக ஆரம்பித்தால் எல்லாரும் அதையே திருப்பிச் சொல்லி அத்தனை சத்தமும் இந்த நாம சப்தத்திலேயே அடங்கிப் போய்விடுகிறது. அரைமணி, ஒருமணி கூட, ராத்ரியெல்லாம்கூடப் பல தினுஸாகப் பலுக்கிப் பலுக்கி, ராக தாளங்களை மாற்றி, நாமங்களையும் மாற்றி பஜனை செய்தால் எல்லாரும் மற்ற பேச்சுப் பேசாமல் அதில் கலந்து கொள்ள முடிகிறது. இது மௌனம் இல்லைதான். ஆனால் அதற்கு 'நெக்ஸ்ட் பெஸ்ட்' (அதற்கடுத்தபடியான உத்தமநிலை) என்று சொல்லலாம். இப்படி நாமாவிலே தோய்ந்து சொக்கிப் போனால், தானே மௌனத்தில் கொண்டு விட்டுவிடும். வெறும் பேச்சு அப்படிப் பண்ணுமா?''

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

உ

# கச்சி மூதூர் அர்ச்சகர்கள் க்ஷேமநல ட்ரஸ்ட்

நிர்வாக அலுவலகம் : 16, இரண்டாவது மெயின் ரோடு, கோட்டூர்புரம், சென்னை - 600 085.
போன்: 24471936 / 2447 2540
**E.Mail : prb@vsnl.com Website : http://personal.vsnl.com/kmaw_trust**

## வேண்டுகோள்



- ஸ்ரீ காஞ்சி மாமுனிவரின் ஆக்ஞைப்படி அவர் அருளுடன் இந்த டிரஸ்ட் 1986ல் ஸ்தாபிக்கப்பட்டது.
- **தமிழ் நாட்டில் உள்ள பழைமையான கிராமக் கோவில்களில் பூஜை செய்யும் மிக ஏழ்மை நிலையில் உள்ள பூசாரிகள் உள்ளிட்ட அர்ச்சகர்களுக்கு ஒவ்வொரு மாதமும் உதவிப்பணம் அளிக்கப்படுகிறது.**
- ஸ்ரீ மஹா பெரியவாளின் மேலான அருளுரைப் படி இந்த நற்பணிக்கு நன்கொடை அளிக்குமாறு ஆஸ்திக அன்பர்களை வேண்டிக் கொள்கிறோம். ரூ.4,000/-க்கு மேல் மாத மொத்த வருமானம் பெறுபவர்கள் தங்களது ஒரு மாத மொத்த வருமானத்தை *தங்கள் வாழ்நாளில் அவர்களுடைய சௌகர்யப்படி*, மொத்தமாகவோ அல்லது பல தவணைகளிலோ நன்கொடையாக கொடுத்து உதவுதல் நலம் என ஸ்ரீ மஹா சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார்கள். அவரவர்கள் தங்களால் இயன்றளவு அளிக்கும் நன்கொடையை நன்றியுடன் பெற்றுக் கொள்வோம்.
- நன்கொடைகளை க்ராஸ் செய்த காசோலை அல்லது டிமாண்ட் டிராப்டாக ***"KACHCHI MOODOOR ARCHAKAS WELFARE TRUST"*** என்ற பெயரில் சென்னையில் ஏதாவதொரு வங்கிக் கிளையில் பெறுமாறு நிர்வாக அலுவலகத்திற்கு அனுப்பவும்.
- தற்சமயம் இந்த டிரஸ்ட் 302 ஏழை அர்ச்சகர்களுக்கு மாத உதவித் தொகையாக ரூ. 425/-ஐ வழங்கி வருகிறது.
- **ஒவ்வொரு ஆண்டும் மாத உதவி கோரும் ஏழை அர்ச்சகர்களின் எண்ணிக்கை அதிகரிப்பதாலும், முதலீடுகளின் பேரில் வரும் வட்டி விகிதம் வேகமாக குறைந்து வருவதாலும், டிரஸ்டின் மூலதனத்தை உடனடியாக அதிகரிக்க வேண்டிய அவசியம் இப்பொழுது ஏற்பட்டுள்ளது. ஆகையால் ஸ்ரீ காஞ்சி மகானின் அருளாக்ஞையின்படி தங்களுடைய நன்கொடைகளை விரைவில் அனுப்பி உதவுமாறு கேட்டுக் கொள்கிறோம்.**

**C.V. Narasimhan, I.P.S., (Retd)**
பொறுப்புக் குழுவின் தலைவர்.



பின் குறிப்பு:

நன்கொடைகளுக்கு வருமானவரி சட்டப்பிரிவு 80 G-யின் கீழ் வரிவிலக்குண்டு. வெளிநாட்டு நன்கொடைகளை ஏற்க FCRA-ன் கீழ் (எண்: 075820173) பதிவு செய்யப்பட்டுள்ளது.

# பூசணி... மோகினி... பூமணி!

(சிரஞ்சீவி கிளினிக். டாக்டர் தேசிகன் முன் அண்ணாசாமி, ஒரு மலை போல மல்லாந்து படுத்து இருக்கிறார்.)

**டாக்டர்:** இந்த உடம்போட நீ ஜப்பான் போனா ரஜினிக்கு அடுத்தபடியா அங்கே பாப்புலர் ஆயிடுவே. சுமோ ரெஸ்லர் ஃப்ரம் இண்டியான்னு! அது சரி, எப்படி என் கிளினிக்கிலே நுழைஞ்சே? ஊசி முனைக் காதுகளிலே யானைகள் புகுந்து வர முடியாதே?

**அண்ணா:** இதோ பாரு தேசிகா. சின்ன வயசிலே நாம ஒண்ணா பிள்ளையார் பந்து ஆடின ஃப்ரெண்ட்ஸ்தான். ஒத்துக்கறேன். ஆனா இன்னிக்கு நான் பேஷண்ட். நீ டாக்டர். சிகிச்சைக்கு வந்தவனை இப்படிக் கேலி செய்றது தர்மமில்லை. ஹிப்போகிரட்டஸுக்குத் தெரிஞ்சா கோவிச்சுப்பார்... அட! எங்கே போனே? திடீர்னு ஆளைக் காணுமே?

**டாக்டர்:** இதோ இங்கேதான் மலை அடிவாரத்திலே இருக்கேன். கிரிவலமா போய் ஸ்டெதைக் கொண்டு வந்துடறேன். அண்ணா மலைக்கு, ஸாரி, அண்ணா சாமிக்கு அரோகரா!

**அண்ணா:** பாத்தியா? கொத்தவரங்காய் பூசணியைப் பாத்து கேலி செய்யறது நியாயமா?

**டாக்டர்:** கேலியா? பூசணியோட அழகை வர்ணிக்கிறேன் கேட்டுக்கோ. பிளட் பிரஷர் 180/110, கொலஸ்ட்ரால் முன்னூறு. டிரை கிளிஸரைட்ஸ் நானூறு. ரெண்டுமே கங்குலி ரெண்டு இன்னிங்ஸ்லேயும் சேர்த்து அடிக்க வேண்டிய ஸ்கோர். வெயிட் முப்பது கிலோ அதிகம். ஷுகர் ஒரு மூட்டை இருக்கு.

**அண்ணா:** என்னோட இந்தப் பூசணி உடம்புக்கு நிஜக் காரணம் யார் தெரியுமா?

**டாக்டர்:** யாரு?

**அண்ணா:** உன் பெண்டாட்டிதான்!

**டாக்டர்:** என்னது? என் பெண்டாட்டியா? என்னடா உளர்றே?

**அண்ணா:** எஸ் சார், எஸ். உன் பெண்டாட்டியேதான் அகப்பை அரசி, கலியுக நளனி, சிற்றுண்டி சிரோமணி, திருமதி ஊர்மிளா தேசிகன்தான்.

**டாக்டர்:** வாட் ரப்பிஷ். அவ எங்கடா சென்லே வந்தா? அவ உன்னைப் பாத்ததுகூட இல்லே. ஏதோ அவ சமைச்சுப்போட்டு சாப்பிட்ட மாதிரி சொல்றே?

**அண்ணா:** யு ஆர் ரைட் அண்டு ராங். அவங்களை நான் பாத்ததில்லை. ஆனா, உன் மனைவியோட சமையல் நிகழ்ச்சிகளையும், அப்பளக் கட்டு மாதிரி அடுக்கு அடுக்கா எழுதிக் குவிச்சிருக்கிற புஸ்தகங்களையும் பாத்து, படிச்சு, என்னோட பெண்டாட்டி சமைச்சுப் போட்ட விதவித சாப்பாட்டினாலே வந்த வினை. ஆனா சும்மா சொல்லக்கூடாது போன ஞாயிற்றுக் கிழமை பண்ணின பலாப்பழ தேன் போளின்னு ஒரு ஐட்டம்... சும்மா அப்படியே நாக்கிலே இன்னும் குத்தாட்டம் போட்



டுண்டு இருக்கு... அப்புறம்? மாம்பழ போண்டா... அடடா!



**டாக்டர்:** இது அபாண்டம். இந்த கூலிங் டவர் உடம்புக்கு என் மனைவி காரணமா? பேத்தல். நியாயமா உடம்பை உதாசீனப்படுத்திய குற்றத்துக்காக இந்த நரலோகத்திலேயே உன்னை தளதளன்னு கொதிக்கிற எஞ்சின் வேஸ்ட் ஆயிலிலே சோலா பூரியா பொரிக்கணும். ஆனா அவ்வளவு பெரிய கொப்பரைக்கு நான் எங்கே போவேன்? ம்? இதைப்பிடி..

**அண்ணா:** என்ன இது? திருத்தி அமைக்கப்பட்ட வாக்காளர் பட்டியல் மாதிரி நீளமா இருக்கு.

**டாக்டர்:** இதெல்லாம் நீ சாப்பிட வேண்டிய மாத்திரைங்க.

**அண்ணா:** என்னது? இவ்வளவா?

**டாக்டர்:** இதெல்லாம் காலையிலே சாப்பிட வேண்டியது. எழுதி முடிக்கறதுக்குள்ளே இங்க் ஆயிடுத்து. ராத்திரி சாப்பிட வேண்டிய லிஸ்ட்டை இதோ எழுதித் தரேன். வசந்தா, இதிலே இங்க் போடுமா...

**('ஜின் டிவி' நிகழ்ச்சியில் அவரைக் காய் அல்வா செய்முறை பற்றி விளக்கும்போது, அல்வா உடும்புபோல வாணலியைப் பிடித்து எடுக்க வர மறுத்து விடுகிறது. ரீ-ஷூட்டுக்காக ஊர்மிளா தேசிகனும் நிகழ்ச்சி தொகுப்பாளினி பூமணியும் காத்திருக்கிறார்கள்.)**

**பூமணி:** ஸாரி மேடம். நெய்க்குப் பதிலா 'கம்' எப்படிக் கிண்ணத்திலே வந்ததுன்னு தெரியலை. ஃப்ளோர் மேனேஜர் ஒன்-மேன் கமிஷனா விசாரணை செஞ்சிண்டு இருக்கார். கொஞ்ச நேரத்திலே அறிக்கை விடுவார்.

**ஊர்மிளா:** 'கம்' போட்டு உணவைத் தயாரிச்சா உடம்பிலே நன்னா ஒட்டும்னு நினைச்சிருக்கலாம்.

**பூமணி:** ஒட்டறதைவிட உடம்பை ஊத வைக்காம இருக்கறதைத்தானே சாப்பிடணும்னு டயடீஷியன்கள் சொல்றாங்க?

**ஊர்மிளா:** பூமணி, சில பேர் வேளா வேளைக்கு விதம் விதமா சாப்பிட்டாகூட சிம்ரன் மாதிரி சிக்குனு இருப்பாங்க.

**பூமணி:** மேடம், எங்க அப்பா அப்படி இல்லை. 'சின்ன பீப்பா பெரிய பீப்பா'ன்னு சீரியல் எடுத்தா, பெரிய பீப்பாய் ரோலுக்குப் பொருத்தமா இருப்பார். நேத்து சிரஞ்சீவி கிளினிக்குக்கு கன்சல்டேஷனுக்காகப் போய்வந்தார்.

**ஊர்மிளா:** (வாணலியைப் பார்த்துக் கொண்டே) உங்க அப்பா பேரு அண்ணாசாமியா?

**பூமணி:** கிரேட்! மேடம்! கோப்பையில் தங்கின டீ இலையைப் பாத்துத்தான் மேல் நாட்டிலே ஜோஸ்யம் சொல்வாங்களாம். நீங்க வாணலியைப் பாத்துச் சொல்றீங்களே! மேடம், வாணலி வேற என்ன சொல்லுது?

**ஊர்மிளா:** உங்கப்பா குண்டு மாத்திரம் இல்லே மத்தவங்க மேலே குண்டுவீச்சையும் செய்யறவர்னு, பூமணி, உங்க அப்பா பாக்க வந்த டாக்டர் வேற யாருமில்லை. என்னோட ஹஸ்பென்ட்தான்.

**பூமணி:** மை காட்! சீரியல்களிலேகூட

**ஜே.எஸ்.ராகவன்**

முன்னூறு எபிசோடுகளுக்கு அப்புறந்தான் இந்த மாதிரித் திருப்பங்கள் வரும்...

**ஊர்மிளா:** வெய்ட்.. இன்னும் இருக்கு. உங்க சானலிலே வர 'மௌன விசும்பல்கள்' தொடர் ஹீரோ அருண்சாமி யாருன்னு தெரியுமா?



**பூமணி:** (திகைப்புடன்) உ... உங்க பையனா?

**ஊர்மிளா:** சே! என் தம்பின்னுதான் சொல்றாங்க. நா அவ்வளவு யங்கா இருக்கேனாம். ஷாட் ரெடியாம். வா

*(மெரீனா கடற்கரை. சிவேலியின்போது குருவாயூர் குட்டிக் கிருஷ்ணனைப் பக்தியுடன் சுமந்து வரும் யானையைப் போல அண்ணாசாமி மெல்ல நடந்து போகிறார். சதாப்தி எக்ஸ்பிரஸ் வேகத்தில் எதிரே வரும் டாக்டர் தேசிகன் எமர்ஜென்சி பிரேக் போட்டு நிற்கிறார்).*

**டாக்டர்:** அண்ணாசாமியா? இப்போ எல்லாம் நீ நடந்து வரும்போது டிங் டிங்னு மணிச்சத்தம் கேக்கறதில்லே.

**அண்ணா:** கிண்டலா? வாளிப்பான அரேபியக் குதிரையா மாறிக் காட்டறேன் பாரு. ஆமா, விடிகாலையிலே இவ்வளவு ஸ்பீடா எங்கே ஓடறே?

**டாக்டர்:** ஹாஹா தெரபி குருப்லே கலந்துக்கணும்.

**அண்ணா:** ஹாஹா தெரபியா? கும்பலா சேந்துண்டு கையைத் தூக்கிண்டு ஹஹஹா, ஹிஹிஹின்னு அரிச்சுவடி சொல்றா மாதிரி சிரிக்கிறாங்களே அதுதானே.

**டாக்டர்:** எஸ்டா. அப்படிச் சிரிச்சா உற்சாகமா இருக்கு. பய உணர்ச்சி போகிறா மாதிரி இருக்கு.

**அண்ணா:** ப-ய உ-ண-ர்-ச்-சி-யா?

**டாக்டர்:** ஆமாண்டா ஆமாம். உங்கிட்டே அதைப் பத்தி சொல்லியே ஆகணும். நீ சைக்காலஜி புரஃபசர் வேற. அண்ணாசாமி, கொஞ்ச நாளா எனக்கு ஒரு விதமான பய உணர்ச்சி அடிக்கடி ஏற்படுது. எதனாலேன்னு புரியுது. ஆனா அதை வெல்ல முடியலே. இதுக்குக் காரணம் யார் தெரியுமா?

**அண்ணா:** உன் மாமியாரா?

**டாக்டர்:** சீச்சி இல்லேடா, உன் மனைவிதான்.

**அண்ணா:** என்னது? என் பெண்டாட்டியா? என்ன, பினேட்டை திருப்பிப் போடறே? தினம் டைட் குளோசப்பிலே பாக்கிற நானே பயப்படறதில்லே. நீ பயப்படறதாவது. நீ அவளைச் சந்திச்சதுகூட இல்லே.

**டாக்டர்:** ம்? திங்கள்ளேந்து வெள்ளிவரை ராத்திரி பாக்கறேனே. நெனச்சாலே உடம்பைத் தூக்கிப் போடறது. 'ஆந்தைக் கண் மோகினி' சீரியலிலே வராங்களே. இப்பக்கூட அந்த ஹீ...ஹிஹிஹி சிரிப்பும், பூம்-பும்பும்பும் உடுக்கை சத்தமும் கூட்டணியா வந்து உலுக்கற மாதிரி ஒரு பிரமை.

**அண்ணா:** வாட் ரப்பிஷ். அது சீரியல்டா. நீ ஒரு டாக்டர் வேற...

**டாக்டர்:** இருந்தா என்ன? டாக்டர்களும் மனுஷங்கதானே? என் சோகக் கதையை மூட் மியூசிக் இல்லாமலே சொல்றேன் கேளு. எட்டு வயசிலே ஒரு சாயந்தரம் நல்ல மழையிலே மாட்டிண்டேன். ஏரிக்கரை சவுக்குத்தோப்பு குடிசையிலே ஒதுங்கினேன். ஒரே மின்னல், இடி, இருட்டு, திடீர்னு அங்கே இருந்த பொம்பளை என்னைப் பாத்து, "ட்டேய், இங்கே வான்னு" தூக்கலா சுத்திட்டு ஒரு மாதிரியா சிரிச்சா. அண்ணாசாமி! மின்னல்லே பாத்த அதே முகம். அதே சிரிப்பு. இப்போ இவ்வளவு வருஷம் கழிச்சு மறு ஒளிபரப்பா சீரியலிலேயும் வந்து உலுக்கிறா மாதிரி பிரமையா இருக்குடா. ராத்திரியிலே அதைப் பாக்காமவும் இருக்க முடியறதில்லே. பாத்தா நா அரை டிராயரா மாறிடறேன். அந்த சவுக்குத் தோப்பு ஹிஹிஹி பேய்ச்சிரிப்பு அப்பப்போ நினைவுக்கு வந்து என்னைப் பந்தாடுதுடா.

**அண்ணா:** மை காட். மத்தவங்க உடம்பைச் சரி பண்ணறே. ஆனா உன் மண்டைக்குள்ளே ஒட்டடையை வெச்சிருக்கே. நீ என்

"அரசியலே இப்போ தலைகீழா மாறிப் போச்சு..."
"எப்படி...?"
"முன்னெல்லாம் லஞ்சம் வாங்கினா கேள்வி கேப்பாங்க. இப்பெல்லாம் கேள்வி கேக்கவே லஞ்சம் வாங்கறாங்க"
- கே. ஆனந்தன்





வீட்டுக்கு வந்து 'கௌச்'மேலே ஒரு செஷன் படுத்துண்டு என்னோட பேச, மண்டையிலே ஒட்டடை அடிச்சுடறேன்.

**டாக்டர்:** வரேண்டா. வீட்டிலே 'ஆந்தைக் கண் மோகினி' எப்போ இருக்க மாட்டான்னு சொல்லு. அப்போ வரேன்.

*(ஸ்பென்ஸர் பிளாஸா ஃபுட் கோர்ட். பூமணியும் அருண்சாமியும் ஸ்ட்ரா இல்லாமல் கண்களாலே ஒருவரை ஒருவர் பருகிக் கொண்டு இருக்கிறார்கள்)*

**அருண்:** பூமணி, காதல் கதைகளிலே நாயகனும் நாயகியும் தான் சோதனைகளைத் தாண்டி கடைசியிலே ஒண்ணா சேருவாங்க. சேராமலும் நிம்மதியா இருப்பாங்க. நம்ம கதையிலே அம்மா அப்பாக்களுக்குள்ளே ஒரு மாதிரியா சோதனை வந்து, சால்வ் ஆகி, நாம சேந்தது வித்தியாமா இல்லே.

**மாலினி:** சீரியல் ஆக்டர் நீ, 'ரீ-கேப்பா' நடந்த கதையைப் பேசலேன்னா உன் மண்டை அனுகுண்டா வெடிச்சுடும்.

**அருண்:** நெனைச்சா வேடிக்கயா இல்லே? நம்ம கதையிலே ரெண்டு 'நாட்' இருந்தது. முதல் முடிச்சிலே, 'தான் பலூன் மாதிரி ஊதினதுக்குக் காரணம் எங்கம்மாவோட விசேஷ சமையல் குறிப்புதான்'னு உங்கப்பா அசால்ட்டா பழி போட்டார். ஆனா எங்கப்பா அதுக்குப் பிராயச்சித்தமா ட்ரீட்மெண்ட் குடுத்து பீப்பாவா இருந்த உன் அப்பாவை புடலங்காயா சுருக்கிட்டார். எங்கம்மாவும், சமையல் பாடங்களாலே இப்படி ஒரு பக்க விளைவு இருக்கலாம்னு உணர்ந்து, 'பாத்துச் சாப்பிடுங்க'ன்னு ஒரு டயட் நிகழ்ச்சியை ஆரம்பிச்சுட்டாங்க.

**பூமணி:** ரெண்டாவது 'நாட்'. உங்கப்பா ஒரு டாக்டராயிருந்தும் என்னோட அம்மாவை ஆந்தைக்கண் மோகினிப் பிசாசா பாத்துட்டு ஒரு மாதிரியா ஆகியிருந்தார். அவரை எங்க வீட்டுக்கு அழைச்சு வந்தபோது கௌன்ட்டர்-ஷாக் ட்ரீட்மெண்டா எங்க அம்மா, பட்டுப்புடவை, மல்லிகைப்பூ, மஞ்சள் பூசிய குங்குமம், பளீர் மூக்குத்தியோட அம்மா வேஷ ஸ்பெஷலிஸ்ட்டுகளான பண்டரிபாய், எம்.வி. ராஜம்மா ரேஞ்சில் குளிர்ந்த புன்னகையோட வரவேத்தாங்க. 'ஆந்தைக் கண் மோகினி' சீரியல் முடிஞ்சு இப்போ 'சுபலட்சுமி - கிருகலட்சுமி' சீரியலிலே வர கெட்-அப் அது. அந்தக் காட்சியைப் பார்த்தகணமே உங்கப்பா மண்டையில் குடியிருந்த வௌவால்களெல்லாம் விர்னு பறந்து வெளியேறினதை எங்கப்பா கண்ணால பாத்தாராம். ஃபிராய்டு சத்தியமா சொல்றார்.

**அருண்:** ஒருத்தரை ஒருத்தர் சாடினதுக்குப் பரிகாரமா நமக்கு கல்யாணத்தைப் பண்ணி வைக்க முடிவெடுத்தாங்க. நம்ம காதல் புஸ்வாணம் ஆகாம, கலர்கலரா சட்டி வாணமா பொழிஞ்சிடுச்சு. அது சரி, நிச்சயதார்த்தத்துக்கு நீ என்ன டிரஸ்... ஹிக்... என்னடிரஸ்... ஹிக்...சே! திடீர்னு... ஹிக்... விக்கறது.

**பூமணி:** *(சீரியசாக)* அருண், இனிமே ஜீன்ஸ், பெடல் புஷர், டாப்ஸ், சுரிதார், டிரெஸ் எல்லாம் போட மாட்டேன். உனக்குப் பிடிக்காத புடைவைதான் கட்டப் போறேன். ஆமா சொல்லிட்டேன்?

**அருண்:** வாட்? பூமணி, விளையாடறியா?

**பூமணி:** வெய்ட். என் மனசை மாத்தினது யார் தெரியுமா?

**அருண்:** கதையிலே மூணாவது 'நாட்'டா? யார்? யாரது?

**பூமணி:** ஆள் யாருமில்லை. மாற்றத்துக்குக் காரணம் மூணாவது 'நாட்'டேதான். அதாவது நீ போடப்போகிற மூணு முடிச்சுதான்! ஹய்! விக்கல் நின்னுடுச்சே. சாமி, அருண் சாமி, என்னோட ஷாக் ட்ரீட்மெண்ட் எப்படி? நானாவது புடைவை கட்டறதாவது?

“தலைவரே! வெள்ள நிவாரண நிதிக்கு நீங்க தந்த காசோலை, பேங்குல பணம் இல்லைனு திரும்பி வந்துருச்சு...”
“அவ்வளவு பெரிய பேங்குலேயே பணம் இல்லைன்னா, நான் என்ன பண்றது?”
- தஞ்சை தாமு



# மீண்டும் விசாலம்!





ஒரு பக்கம் ஆவி, மாந்த்ரீகம் என கிராஃபிக்ஸ் களேபரங்கள் மிரட்ட, இன்னொரு பக்கம் மாமியார் - மருமகள் சவால், இரண்டு பெண்டாட்டி மோதல் என வெறுப் பேற்ற, நடுவே திக்கித் திணறிக்கொண்டிருக்கும் டி.வி நேயர்களுக்கு, வயிற்றில் ஆவின் பாலை வார்த் திருக்கிறது பிரசார் பாரதி.

நல்ல கதையம்சமும், கலை அம்சமும் கொண்ட சில சிறந்த டி.வி சீரியல்களைப் பொறுக்கி எடுத்து, டிடி பொதிகை யிலும் பிராந்திய ஒளிபரப்பிலும் மறு ஒளிபரப்புச் செய் கிறார்கள்.

இதற்காக, தமிழிலிருந்து தேர்வாகியிருக்கும் தொடர்களில் ஒன்று கிருஷ்ணஸ்வாமி அஸோஸியேட்ஸின் தயாரிப்பான 'விசாலம்' தொடர். இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு பொதிகையில் இந்தத் தொடர் வெளியானபோது, தாய் மார்களின் ஏகோபித்த வரவேற்பு கிடைத்தது. 'மைலாப்பூர் அகாடமி' 'சிறந்த டி.வி கதை விருது' கொடுத்துப் பாராட்டியது, தரமான தொடராக ரேட்டிங்கில் முதலிடம் பெற்றது போன்ற பற்பல காரணங்களால் 'விசாலம்' மறு ஒளிபரப்புக்குத் தேர்வாகியுள்ளது. டிசம்பர் 26 முதல், திங்கள், செவ்வாய்கிழமைகளில் இரவு பத்துமணிக்கு ஒளிப் பரப்பாகிறது.

"தமிழ் பிராமணக் குடும்பத் தைச் சுற்றி பின்னப் பட்ட கதை! கொள் ளுப்பாட்டி விசால மாக சீதாராஜன், மகள் விசாலமாக ஷர்மிளா, பேத்தி விசாலமாக மறுபடி சீதாராஜன் என ஐந்து தலைமுறை பற்றிய கதை என்றாலும் சுதந்திரப் போராட்ட காலத்திலிருந்து லேட்டஸ்ட் கம்ப்யூட்டர் யுகம் வரை நடுத்தரக் குடும்பத்தில் ஏற்படும் சமுதாய, கலாசார, மாற் றங்களையும் யதார்த்தமாகக் காட்டியதுதான் தொடரின் மிகப் பெரிய வெற்றி" என்கிறார் டைரக்டர் கீதா கிருஷ்ணராஜ்.

- ரிமோட் ரீமா

தமிழக காவல் துறையின் கூடுதல் டி.ஜி.பி. பொறுப்பில் இருக்கிறார் திலகவதி. இவர் எழுதிய 'கல்மரம்' நாவலுக்கு, சாகித்திய அகாடமி இவ்வாண்டு விருது அளித்துள்ளது.



**''விருது பெற்றிருக்கும் 'கல்மரம்' கட்டடத் தொழிலாளர்களின் வாழ்க்கை பற்றிய ஒரு நாவல். இப்படி ஒரு நாவலை உங்களை எழுதத் தூண்டியது எது?''**

''நான் அப்போது, கூட்டுறவுத் துறை சம்பந்தமான குற்றங்களைக் கையாளும் அலுவலகத்தில் பணி புரிந்து கொண்டிருந்தேன். என் அலுவலக அறையின் ஜன்னலைத் திறந்தால், பசுமையான இயற்கையின்பால் மனம் லயித்துப் போகும். ஒருநாள் திடீரென்று அங்கிருந்த மரங்கள் வெட்டப்பட்டன. சிறு கட்டடம் இடிக்கப்பட்டது. பிரமாண்டமான பல அடுக்குக் கட்டடத்துக்கான ஆயத்தப் பணிகள் ஆரம்பமாயின. அந்தக் கட்டடம் உருவாக உழைக்கும் ஏராளமான தொழிலாளர்களை எட்ட இருந்து கவனித்தேன். என் ஆர்வம் அதிகமானது.

அவர்களைச் சந்தித்து அவர்களின் வாழ்க்கையின் பிரச்னைகள் குறித்துப் பேசினேன்; பல்கலைக்கழகத்தில் கட்டடத் தொழிலாளர்கள் வாழ்க்கை நிலை குறித்து எழுதப்பட்ட ஆய்வுகளைப் படித்தேன். ஆராய்ச்சி செய்தவர்களிடம் பேசினேன். கட்டடத் தொழிலாளர்கள் வசிக்கும் குடிசைப் பகுதிகளுக்குச் சென்று அவர்களது வாழ்க்கையை நேரில் கண்டேன்.

அவர்கள், அதிகார வர்க்கத்தினரால் எப்படியெல்லாம் சுரண்டப்படுகிறார்கள்; பணியிடத்தில் அவர்கள் சந்திக்கும் தொல்லைகள்; சுண்ணாம்பு, சிமெண்ட் இவற்றுடனே வாழ்வதால் ஏற்படும் உடல்நலக்கேடுகள் என்று பல சோகமான விஷயங்கள் எனக்குத் தெரியவந்தன.

அவர்கள் பிரச்னைகளுக்குத் தீர்வு என்ன என்று யோசித்தேன். முதலாளி வர்க்கமும் தொழிலாளி வர்க்கமும் ஓர் இடத்தில் பிரச்னைகள் தீர்ந்து கைகுலுக்க வேண்டும் என என் மனம் விரும்பியது. அதற்காக, எல்லா பாத்திரங்களும் நான் சந்தித்த நிஜமனிதர்களாக இருக்க, பிரச்னைகளைத் தீர்ப்பவராக

# கட்டடத் தொழிலாளி அளித்த விருது!

ஒரே ஒரு கற்பனைப் பாத்திரத்தை உருவாக்கினேன்."

***"உங்கள் மனத்தில் உருவான கரு, எழுத்து வடிவம் பெற்றபோது முழுமையான மனத்திருப்தி ஏற்பட்டதா?"***

"நான் கல் மரத்தை 'தாமரை' இதழில் தொடராக எழுதினேன். பத்திரிகைக்கு எழுதுகிறபோது, குறித்த நேரத்தில் அத்தியாயம் எழுதித் தரவேண்டிய நெருக்கடி, பத்திரிகையின் பக்கப் பிரச்னை போன்றவற்றால், நாவல் எனக்கு முழுமையான திருப்தி தரவில்லை. தொடர் முடிந்த பிறகு, நாவலில் நிறைய திருத்தங்கள் செய்து புத்தகமாக வெளியிட்டேன். புத்தகம் எனக்கு முழு திருப்தியை அளித்தது."

***"நாவலுக்கு விருது கிடைக்கும் என்று எதிர்பார்த்தீர்களா?"***

"விருதுகளுக்காக நான் எதையுமே எழுதுவதில்லை. எனக்கு எது குறித்து எழுத விருப்பமோ அதுபற்றி எழுதுகிறேன். எனவே, 'கல் மரத்துக்கு' சாகித்திய அகாடமி விருது கிடைக்கும் என நான் எதிர்பார்க்கவில்லை.

'கல் மரம்' வெளியான சில தினங்களில், வடசென்னையில், கட்டடத் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் மதிய உணவுடன் இணைந்த நிகழ்ச்சிக்கு நான் அழைக்கப்பட்டேன். நிகழ்ச்சிக்கு அலுவலகப் பணி காரணமாக மிகவும் தாமதமாகவே என்னால் போக முடிந்தது. தொழிலாளர்கள் பலரும் பசியோடு காத்திருந்தனர் என்பதால் நான் மிகவும் சுருக்கமாகப் பேசி முடித்து விடுவதாகச் சொன்னபோது, ஒரு முதிய பெண் தொழிலாளி, 'சாப்பாடு என்னம்மா தினமும் இருக்குது; எங்களைப் பத்தி நீ புத்தகம் எழுதியிருக்கே. நீங்க பேசுங்கம்மா!' என்றார்.

இத்தனைக்கும் அவர் படிக்காதவர். ஓய்வு நேரங்களில், உடன் வேலை செய்த, எட்டாம் வகுப்பு படித்த சக பெண் தொழிலாளி ஒருவர் படிக்க, இவரைப் போன்ற பலரும் சுற்றி உட்கார்ந்து அதைக் கேட்பார்களாம். 'எங்க வாழ்க்கையை அப்படியே எழுதியிருக்கீங்க!' என்று என்னை வாழ்த்தினார் அந்தப் பெண்மணி. யாரைப் பற்றி எழுதினேனோ, அவர்களிடமிருந்தே கிடைத்த வாழ்த்து, எனக்குக் கிடைத்த பெரிய விருது என்று தோன்றியது."

***"சாகித்திய விருது, கையோடு சர்ச்சையையும் அழைத்து வருவது வழக்கம்தான். இப்போது கூட, சாகித்திய அகாடமி அமைப்பில் உறுப்பினராக இருக்கும் உங்களுக்கு விருது தரப்பட்டுள்ளது என சர்ச்சை எழுந்துள்ளதே!"***

"தமிழ் எழுத்துலகில் குறுகிய குழு மனப்பான்மை மிகவும் அதிகமாக இருக்கிறது. யாருக்கு எந்த விருது கிடைத்தாலும், அதனை ஏற்க மறுப்பது இவர்களுக்கு வழக்கமாகி விட்டது. நான் சாகித்திய அகாடமியின் பொதுக் குழுவில் உறுப்பினர் என்பது உண்மைதான். ஆனால், விருதுகளை சாகித்திய அகாடமியின் செயற்குழுதான் தேர்வு செய்யும். சொல்லப் போனால், செயற்குழு உறுப்பினர்களுக்கு விருது தரத் தடை இருக்கிறது. தெரியாமல் சிலர் பேசுகிறார்கள்."

***"அடுத்த நாவல் எதைப் பற்றி?"***

" 'ராகவதி ஆறு' என்ற தலைப்பில். 1930 முதல் 1990 வரையிலான தமிழ்நாட்டு அரசியல், கலாசார நிகழ்வுகளைப் பதிவுசெய்கிறேன். தமிழ்நாட்டு, மலைவாழ் இன மக்களைப் பற்றி ஒரு ஆவணப் படம் எடுக்க விரும்புகிறேன்"

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படம் : **யோகா**

*"நியூமராலஜிப்படி எனக்கு இரட்டை எண்தான் ராசின்னு ஜோஸ்யர் சொல்லியிருக்கார் டாக்டர்!"*

*"அதுக்கு நான் என்ன பண்ணணும்?"*

*"என்னோட ஒற்றைத் தலைவலியை இரட்டைத் தலைவலியா மாற்ற முடியுமான்னு பாருங்களேன்!"*

*- அதிரை புகாரி*



அடுத்த இதழ்

# கல்கி

## பொங்கல் ஸ்பெஷல்!



முக்கூர்
லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

அருளிய

## குறையொன்றுமில்லை

எட்டாம் பாகம் ஆரம்பம்



சிரிப்பு ஸ்பெஷலிஸ்ட்

கு.ஞானசம்பந்தம்

எழுதும்

## சினிமாவுக்குப் போகலாம் வாங்க!

அட்டகாசமான அனுபவத் தொடர்

மரபின் மைந்தன் முத்தையா

எழுதும்

# வானவில் வயசு!

டீன் ஏஜ் டானிக் தொடர்





# "ரஜினி சூப்பர் ஸ்டாரே இல்லை!"

தனுஷ் மனம் திறக்கிறார்!

# வாரம் ஒரு வாசகர் குடும்பம்

ஒருபுறம் தமிழ்நாடு காகித ஆலை. இன்னொருபுறம் தனியார் சர்க்கரை ஆலை. இரண்டுக்கும் இடையே கரூர் மாவட்டத்தில், வேலாயுதம்பாளையம். 'வெறும் வெள்ளைத்தாளில் சர்க்கரை என்று எழுதிக் காட்டினால் மட்டும் இனித்து விடுமா' எனக் கேட்பவர்களுக்கு, இந்த ஊரிலிருந்து வெள்ளைத் தாள்களும் உற்பத்தி செய்யப்படுகின்றன. இனிக்கிற சர்க்கரையும் உற்பத்தி செய்யப்படுகிறது. அதுபோலவே வெள்ளை மனசும், இனிமையாகப் பழகுகிற சுபாவமும் கொண்டவர் ஐம்பது வயதாகும் கல்கி வாசகர் சம்பத். பத்திரிகை வாசகர்கள் மத்தியில் 'எம். சம்பத், வேலாயுதம்பாளையம்' என்கிற பெயர் வெகு பிரபலம்.

ஏழாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தபோதிலிருந்தே புத்தகங்கள் வாசிக்கும் பழக்கம் சம்பத்துக்குத் தொற்றிக் கொண்டது. கிராமத்துக் கிளை நூலகத்தில் ஒரு குட்டிப் பூனையைப் போல எட்டிப் பார்த்தவருக்கு, பின்னாளில் சகட்டுமேனிக்கு சகல புத்தகங்களையும் எடுத்து வாசிக்கும் ஆர்வம் ஏற்பட்டுவிட்டது. 'பொன்னியின் செல்வன்' முதல் பாகத்தை எடுத்து வைத்துக் கொண்டு வாசிக்க உட்காரும் முன்பாக, அதன் இரண்டாவது பாகத்தை நூலக அறையின் ஏதேனும் ஒரு மூலையில் எடுத்து ஒளித்து வைத்து விடுவாராம். முதல் பாகம் படித்து முடித்தவுடன், தன் கைக்கு இரண்டாம் பாகம் கிடைக்காமல் போய் விடுமோ என்கிற பயம்.

''அப்போதெல்லாம் இரவு ஏழு மணிக்குக் கழுத்தைப் பிடித்துத் தள்ளாத குறையாக, என்னை வெளியேற்றி விட்டு நூலக அறையைப் பூட்டுவார் நூலகர்'' என்று தன் மலரும் நினைவுகளில் மூழ்கிப் போகிறார் எம்.சம்பத்.

கல்லூரியில் புகுமுக வகுப்புப் படித்தவர். அதன் பின்னர் தஞ்சையில், கூட்டுறவு மேற்பார்வையாளர் பயிற்சி பெற்றிருக்கிறார். 1975-ல் தமது ஊரின் அருகில் உள்ள தனியார் சர்க்கரை ஆலையில், தொழிலாளர் கூட்டுறவு சங்க அலுவலகப் பணி. படிப்படியாக உயர்வு பெற்று அதன் நிர்வாகியாக 1993 வரை செயல்பட்டிருக்கிறார்.

1977லிருந்து வார இதழ்களுக்கு வாசகர் கடிதம் எழுத ஆரம்பித்தவர், இருபத்தி நான்கு வயதில் 1979-ல் திருமணம் செய்து கொண்டிருக்கிறார்.

''கல்யாணமாகி வந்த புதுசல என்னடா இது வாங்குற சம்பளத்துல ஒரு பகுதியைப் புத்தகம் வாங்கவும், அதுங்களுக்கு கார்டு எழுதிப் போடவுமே செலவு பண்றார்னு நெனைப்பேன். ஆனா நாளாவ நாளாவ படிக்கறதும், அதுபத்தி விமரிசனங்களை எழுதுறதும் நல்ல விஷயம்தானேன்னு நானும் அப்புறமா எதுவும் சொல்றதில்லைங்க!'' என்கிறார் அவரது மனைவி சரோஜா.

## என் அருமைக்



மகன் பிரகாஷ். டிப்ளமோ இன் பேப்பர் டெக்னாலஜி படித்து விட்டு, பள்ளிப்பாளையம் சேஷசாயி பேப்பர் மில்லில் சூப்பர்வைசராக வேலை பார்த்து வருகிறார். மகள் புனிதா பி.எஸ்ஸி., கணிதம் இறுதியாண்டு படித்து வருகிறார். இருவருக்கும் கல்கியில் இளமை கல்கி பகுதியும், சினிமா விமர்சனமும் மிகவும் பிடித்திருக்கின்றன.

• எம்.சம்பத்



• குடும்பத்துடன்

# காதலிகள்!

பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன்பாக, புகளூர் சர்க்கரை ஆலை நிர்வாகம் கைமாறிப் போனது. அப்போது அதன் எல்லா அலுவலர்களையும், தொழிலாளர்களையும் வேலையிலிருந்து நிரந்தரமாக நீக்கி, வீட்டுக்கு அனுப்பி வைத்தது. புதிய நிர்வாகம் வந்து அதன் பழைய ஆட்களில் குறிப்பிட்ட நபர்களை மீண்டும் வேலைக்குச் சேர்த்துக் கொண்டது. வேலைக்கு அமர்த்தப் படாத ஊழியர்கள் பலரில் எம். சம்பத்தும் ஒருவர். மாத வருவாய்க்கு வழியற்றுப் போனது. கடந்த பன்னிரண்டு ஆண்டுகளாக பலவேறு நிறுவனங்களில் மார்க்கெட்டிங்கில் பணிபுரிந்து வந்திருக்கிறார். ஒரு கட்டத்தில் அதுவும் சரியாக வராமல் போனது. சமீபத்திய ஓராண்டு காலமாக, கரூரில் தனியார் ஹோட்டல் ஒன்றில் கேஷியராக வேலை பார்த்து வருகிறார்.

"ஒரு பத்திரிகைக்கும் சரி, வாசகனுக்கும் சரி எப்போதும் எதிர்க்கட்சி பார்வைதான் இருக்க வேண்டும். ஆனால், அதுவே ஒருதலைப் பட்சமான எதிரிப் பார்வையாக மாறிவிடக் கூடாது. அப்போதுதான் நம்மைச் சுற்றிலும் நடக்கிற விஷயங்களை நடுநிலை தவறாது தார்மிக அளவில் நேர்மையாக விமர்சனம் செய்ய முடியும். அந்த வகையில் கல்கியில் வெளிவரும் தலையங்கப் பகுதி, பத்திரிகை உலகுக்கே ஒரு கலங்கரை விளக்கு" என்கிறார் அவர்.

கடந்த இருபத்தியெட்டு ஆண்டுகளாக பத்திரிகைகளுக்கு வாசகர் கடிதம் மற்றும் கேள்விகள் எழுதி அனுப்பி வரும் மார்க்கண்டேய வாசகர், சம்பத். மாதம் சராசரி நூற்றைம்பது ரூபாய்க்கு தபால் கார்டுகள் வாங்குகிறார். கடிதங்கள் பிரசுரம் ஆனாலும், ஆகாவிட்டாலும் அதைப் பற்றி எல்லாம் கவலையில்லை. இதுவரை சுமார் இருபதாயிரம் கடிதங்கள் (கேள்விகள் உட்பட) பிரசுரம் ஆகியுள்ளனவாம்.

"இத்தனை ஆண்டுகளாக வாசகர் கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தாலும், இன்னமும் எனக்கு அலுத்துப் போகவில்லை. இப்பொழுது கூட ஒரு வாரப் பத்திரிகை வாசித்து முடித்தவுடன் என் கைகள் பேனாவையும் அஞ்சல் அட்டையையுமே தேடுகின்றன. இது ஆயுள் வரைக்கும் தொடர்கின்ற பந்தமாகவே எனக்குத் தோன்றுகிறது. வாசகர் கடிதங்கள் எனதருமைக் காதலிகள்!" என்று தன் அன்பு மனைவியை அருகிலே வைத்துக் கொண்டு துணிச்சலுடன் கூறுகிறார் வேலாயுதம்பாளையம் எம். சம்பத்.

கட்டுரை, படங்கள் :
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# சுடோகு சுந்தரி

அடுப்பில் கடுகு வெடித்து தாளிப்பு தீய்ந்து கொண்டிருப்பதைப் பற்றி கடுகளவும் கவலைப்படாதவளாய் என் மனைவி சுந்தரி ஹாலின் சோபாவில் உட்கார்ந்து சொகுசாக 'சுடோகு' போட்டுக்கொண்டிருந்தாள்.

''காலங்கார்த்தாலே இப்படி பேப்பரும் கையுமா உட்காந்துண்டேயிருந்தா எப்படி?'' என்று எல்லா மனைவிகளும் காலை நேரத்தில் கணவனிடம் உதிர்க்கும் டயலாக்கை என் மனைவியிடம் நான் பேச வேண்டியிருந்தது. தினமும் நியூஸ்பேப்பர் வந்ததும் வராததுமாக 'லபக்'கென்று யாருக்கும் கொடுக்காமல் பிடுங்கிக்கொண்டு உட்கார்ந்து விடுகிறாள். கேள்வி கேட்க லஞ்சம் வாங்கிய எம்.பி.யைப் பற்றியோ, கேள்வி கேட்பாரில்லாமல் அடிக்கடி உருவாகி வரும் காற்றழுத்த மண்டலம் பற்றியோ இவள் படித்துத் தெரிந்து கொள்ளும் ஆவலில்தான் செய்தித் தாளை முதலில் அபகரிக்கிறாளோ என்று கேள்வி கேட்காதீர்கள்.

சரிந்து விழும் சேலையின் தலைப்பு, மூளையை அதிர வைக்கும் மியூசிக் சானலின் சப்தம், குக்கரின் விசில் என சுற்றுப்புறத்தின் எந்தப் பாதிப்பையும் சட்டை செய்யாமல் சுடோகு கட்டங்களில் எண்களைப் போடுவதும் அழிப்பதுமாக சோபாவில் அழிச்சாட்டியமாக உட்கார்ந்துவிடுகிறாள்.

''ஏன் கடுகு வெடிச்சா நீங்க பார்க்கக் கூடாதா என்ன? இப்படித் தவிச்சுண்டு ஒருத்தி அல்லாடறாளே கொஞ்சம் ஹெல்ப் பண்ணுவோம்னு உங்களுக்குத் தோணலையே? வெறும் பழைய சாதத்தை சாப்பிடச் சொல்லணுமேன்னு பரிதாபப்பட்டு கொஞ்சம் தாளிச்சுக் கொட்டலாமேன்னு அடுப்பிலே வைச்சுட்டு உட்கார்ந்தேன். ஒவ்வொரு கட்டமா நிரப்பறதுலே கொஞ்சம் கவனிக்காம விட்டுட்டேன். பாவம், கஷ்டப்பட்டு போட்டுண்டு இருக்காளேன்னு என் கரேஜ் பண்ணாம இப்படி தொண தொணன்னு டிஸ்டர்ப் பண்ணினா?...''

இனிமேல் மரியாதையில்லை என புரிந்து கொண்டவனாகத் தீய்ந்து போன கடுகுதாளிப்பைக் கொட்டி, பழைய சோறில் மோரைவிட்டு பிசைந்து, அதை காலை டிபனாகக் கொட்டிக்கொண்டு, மதிய உணவாக அதையே கட்டிக் கொண்டு நான் ஆபீஸுக்குக் கிளம்ப ஆயத்தமாகிக்கொண்டிருந்தேன்.

அப்பொழுது தொலைபேசி ஒலிக்க, என்னை ஒரே வீச்சில் தள்ளிவிட்டு சுந்தரி சுடோகுவிலிருந்து சடுதியில் விடுபட்டுப் பாய்ந்தாள்.

''ஹலோ! கமலாவா... நீதான் போன் பண்ணுவேன்னு எனக்குத் தெரியும்... ஆமாம் சொல்லு. இன்னும் நானும் முடிக்கலே.. கார்த்தாலே பேப்பர் கடங்காரன் வர்றதுக்கே ஆறாயிடறது... உடனே உட்கார்ந்தா பொண்ணு ஆத்துக்காரர்னு ஒரே பிடுங்கல். நேத்து முக்கால் மணி நேரத்திலே முடிச்சேன். இன்னிக்கு ஐஞ்சு நிமிஷம் முன்னாடி முடிச்சுடணும்னு பார்க்கறேன். எங்கே ஆளாளுக்கு காப்பியைக் கொண்டா, தலையை வாரிவிடுன்னு தொந்தரவு... ஓகோ, உனக்கு அரை நாளாச்சா? அப்படித்தான் ஆகும்... என்ன எனக்கு மட்டும் இத்தனை சீக்கிரமா எப்படிப் போட முடியறதுன்னு கேட்கிறியா? நான் அந்த காலத்து பி.எஸ்.ஸி. மேத்ஸ் ஆச்சே! அதான் ஒரு மெதாடிகலா அப்ரோச் பண்ணி போட்டுடறேன். என்ன? சொல்லித் தர சொல்றயா பாப்போம். ஒழிஞ்சபோது வாயேன்''

க்ரீம் தடவிக் கொள்ளும் விளம்பர

பெண்ணின் முகம் போல சுந்தரியின் முகமும் தொலைபேசியில் பேசியபோது படிப்படியாக மெருகேறி என் பக்கம் திரும்பியபோது மிருகமாக உருமாறியது.

"ஹு"ம்... ஊர்ல இருக்கற அத்தனைபேரும் போன் பண்ணி ஆச்சரியப்படறா? வீட்டிலேதான் ஒரு ரெகக்னிஷன் இல்லே. ஜப்பான்லயோ, சீனாலயோ ஒரு சுடோகு புத்தகம் போட்டிருக்காளாம் வாங்கிண்டு வந்து தாங்கோன்னு கேட்கறேன் காதுலயே போட்டுக்கலே... எல்லாம் மேல்ஷாவனிஸம். எங்கே பொண்டாட்டி சுடோகு எக்ஸ்பர்ட் ஆயிடப் போறாளோன்னு ஒரு ஆத்திரம்" என்று ஜாடை பேசி விட்டு "சரி, சரி ஆபிஸ் போறதுக்கு முன்னாடி அடுப்பிலே பாலை வைச்சு எனக்கு இரண்டாம் தரம் காபி ஒரு வாய் கலந்து கொடுத்துட்டாவது போங்க"

சொடுக்குப் போட்டு என்னை ஏவிவிட்டு அவள் சுடோகு ஆட ஆரம்பித்ததில், கோபத்தால் கடித்த என் பற்களும் ஆட ஆரம்பித்



## அகிலா கார்த்திகேயன்



தன.

**சு**டோகு, சொடுகு, சுடேகு என்று சுடமுடவென்று எப்படி வேண்டுமானாலும் அழைக்கப்படும் இந்தக் கட்டம் நிரப்பும் ஆட்டத்தை என் மனைவிக்கு ஆரம்ப கட்டத்தில் அறிமுகப்படுத்தி வைத்தவன் அடியேன்தான்.

"லைட்டைப் போட்டுண்டு தினமும் அப்படி என்ன பேப்பர்லே போட்டுண்டு இருக்கீங்க தூங்கவிடாம?" என்று சுந்தரி எரிச்சல் பட்டபோது நான் பேசாமலிருந்திருக்கலாம்.

"நீ பேசாம படுத்துத் தூங்கு. இதெல்லாம் கொஞ்சம் பிரைன் ஓர்க் பண்ணி போடற ஆட்டம். உனக்குச் சொன்னா புரியாது" என்று அவள் தூக்கத்தைக் கலைத்ததுமல்லாமல், அவளுள் தூங்கிக் கொண்டிருந்த தன்மானத்தையும் உசுப்பி எழுப்பிவிட்டது பிசகாகிவிட்டது.

காமா சோமான்னு போட ஆரம்பித்தவள் கட்டம் கட்டமாக முன்னேறி எண்களோடு புகுந்து விளையாடக் கற்றுக் கொண்டாள்.

டி.வி சீரியல்களையே ஒதுக்கும் அளவுக்கு இவளுடைய சுடோகு மேனியா மேம்பட்டது.

அட! மார்கழி மாத வாசல் கோலத்தைக்கூட நாளொன்றுக்கு ஒரு சுடோகு புதிராக அரிசிமாவில் போட்டு வைத்து அடுத்த வீட்டு மாமிகளிடம் விடை கேட்டு உபத்திரவம் செய்யும் அளவுக்கு இவளுடைய சுடோகுபித்து அத்துமீறிவிட்டிருந்தது.

**ச**ரி, இவள் சுடோகு பசிக்குத் தீனி போட்டால்தான் சரி வருமென்று நான் ஒரு தீர்மானத்துக்கு வந்தேன். அந்த பித்தையே எதையாவது உபயோகரமாக திருப்பிவிட்டால் ஆதாயமாக்கலாமென்று எண்ணி ஆபீஸ் கம்ப்யூட்டரில் அடித்து ஒரு விளம்பரத்தை லேசர் பிரிண்ட் செய்துகொண்டேன்.

சுலோக வகுப்பு, தியான வகுப்பு, இத்யாதிகளைப் போல சுடோகு சொல்லித் தர வகுப்புகள் நடத்தக்கூடாதா என்ன?

'சுடோகு வகுப்பு நடத்தப்படும்
சுந்தரி நெ.7, படகு நகர்'

என்று பிரிண்ட் செய்த விளம்பரத்தை ஆபிஸிலிருந்து போகும் வழியில் ஒரு அட்டையை வாங்கி ஒட்டி எடுத்துக் கொண்டு வீட்டை நோக்கி ஓடினேன்.

அப்பாடா! சுந்தரியின் பைத்தியத்தைக் காசாக்கிக் கொள்ள இப்படி ஒரு ஐடியா கிடைத்ததே என்று ஒரு உற்சாகத்தோடு வீட்டை நெருங்கினேன்.

"சுந்தரி, இதைப் பாத்தயா?" என்று ஆவலோடு நான் குரல் கொடுக்க என் பெண்தான் சமையலறையிலிருந்து காபியுடன் வெளிப்பட்டாள்.

"எங்கே உங்க அம்மா?" என்றேன்.

"அட போங்கப்பா! என்னமோ சுடோகு கிளாஸாம், இன்னிலேர்ந்து சேர்ந்திருக்காளாம். மாசம் இருநூத்து ஐம்பது ரூபாவாம். பக்கத்துத் தெருவிலே ஒரு மாமி ஆரம்பிச்சிருக்காளாம். வர ஒன்பது மணி ஆகுமாம். ஏதாவது ராத்திரிக்கு, கூடா உங்களைப் பண்ணி வைக்கச் சொல் விட்டு ஓடிட்டா."

'அடேய்! யாரடா அது, சுடோகைக் கண்டுபிடித்த சண்டாளன்' என்று கதற வேண்டும் போலிருந்தது! ○

"நீங்க மெட்டுக்குப் பாட்டு போடுவீங்களா, இல்லை பாட்டுக்கு மெட்டு போடுவீங்களா...?"
"ரெண்டும் இல்லை. துட்டுக்குப் போடுவேன்"
– வீ. சாரதிடேச்சு

# வட்டமேஜை

✉ மிருதுளா சிவக்குமாரின் படத்தை 'கல்கி' அட்டையில் பார்த்ததும் மெய் மறந்தேன். உமது புகைப்படக்காரர் எப்படித்தான் இவ்வளவு உயிரோட்டமாகப் படம் பிடித்தாரோ?
**மொரட்டுப்பாளையம்,**
**க.நா. இராஜேஸ்வரன்.**

✉ சென்னையின் பதினான்கு சட்டசபை தொகுதிகளின் எம்.எல்.ஏக்கள் பற்றிய சிறு குறிப்புகள், சூடான வெண் பொங்கலுக்குச் சுவை சேர்த்த முந்திரிப் பருப்பு!
**கோவை,**
**ராமு அர்விந்த்**

✉ வீணை பவானி கதைக்கு கோபுலுவின் ஓவியம் கருதி சேர்த்தது.
**சென்னை - 64,**
**வெ. கோபாலன்**

✉ வோட்டுக்காக மக்கள் பணம் வாங்கினால், கேள்வி கேட்க எம்.பிக்கள் பணம் வாங்க வேண்டியதுதானே? வேதனை!
**ஸ்ரீவில்லிபுத்தூர்,**
**என். சங்கரதாஸ்**

✉ யுகபாரதியின் கவிதைகளும், ஓவியமும் அசத்தல் ரகம்.
**மதுரை - 16,**
**ஆர். லட்சுமி**

✉ உலகத்தில் எல்லாரையும், எல்லாவற்றையும் நேசிப்பது பெரிய விஷயம். அதற்கான தூண்டுதலைத் தருகிறது விஜயநிலாவின் 'லவ் பாஸிட்டிவ்'.
**மயிலாடுதுறை, இரா. இராஜேந்திரன்**

✉ வைகோ அதிரடியாகவும், இல. கணேசன் அனலடியாகவும்.... பேட்டியளித்து சமாளித்துள்ளார்கள். தேர்ந்த அரசியல்வாதிகளாச்சே...!
**சர்க்கார்பதி, பி. ஜெயப்பிரகாஷ்**

✉ மனிதநேயம், சமூகப் பொறுப்புணர்ச்சி ஆகியவற்றை மென்மையாக, ஆர்.சூடாமணி எடுத்துச் சொன்னது அருமை.
**கடம்பத்தூர், என். அண்ணாதுரை**

✉ ஆர். சூடாமணியின் 'கண்டெடுத்த கனவு' கண்ணீரை வரவழைத்த நனவு.
**சென்னை - 92, கி. சரோஜா**

✉ குறிஞ்சிப்பூவுக்கும் மேலே என்று 'தவமாய் தவமிருந்து...' படத்துக்கு நீங்கள் எழுதிய விமர்சனம் கனகச்சிதம்.
**மதுரை, என். பாலகிருஷ்ணன்**




✉ ஹம்சத்வனி தொடக்கவிழா குறித்து தும்புருவின் விமர்சனம் படித்தேன். விமர்சனம் எழுதும் பேனா, பேயாக இருக்கக்கூடாது. தாயாக இருக்க வேண்டும்!
**இந்திராநகர்,**
**கிருஷ்ணமூர்த்தி**

## தாயாக இரும்!

✉ ஹம்சத்வனியில் மைக் கோளாறு செய்ததையும், மும்மூர்த்திகளின் படங்கள் உரிய கௌரவம் பெறவில்லை எனவும் மட்டுமே குறிப்பிட்டு எழுதியுள்ள 'தும்புரு'வுக்கு, மே.வங்க ஆளுநரின் கவிதை நடை வாழ்த்தும், அமெரிக்க வைஸ்கான்ஸலின் மனம் திறந்த பாராட்டும் காதில் விழவில்லை போலும். விமர்சனத்தில், படிப்பதற்குக் கிண்டலாக இருப்பவை மட்டும்தான் தும்புருவின் நடைக்குத் தீனிபோடும் போல!
**சென்னை - 18, எஸ். விசுவநாதன்**

# கிரேஸி ட்ரெய்லர்!

'ஆஹா'வுக்குப் பிறகு நீண்ட இடைவெளி விட்டு கமல் அல்லாத இரு படங்களுக்கு 'கலகல' வசனங்கள் எழுதியுள்ளார் 'கிரேஸி' மோகன். ஒன்று 'ஜெர்ரி,' மற்றொன்று 'இதயத்திருடன்'. 'ஜெர்ரி' படத்திலிருந்து சில சிரிப்பு வசனங்களை 'கல்கி'க்காக வெளியிட்டார் கிரேஸி மோகன்.

"படத்தின் ஹீரோ ரமேஷ், கிரிக்கெட் வீரர். ஒரு மேட்ச்சில் அவர் ஜெயித்ததைப் பார்த்து ஹீரோயின் ஸ்ருதி அவரிடம் ஆட்டோகிராப் கேட்க வருவார். ஆனால் அப்பொழுதுதான் மேட்ச் - ஃபிக்ஸிங் மூலம் ரமேஷ் ஜெயித்தார் என்கிற உண்மை தெரிய வரும். உடனே கோபத்துடன்,

"ச்சே, நீ வீரன்னு நினைச்சுதான் நான் உங்கிட்ட ஆட்டோகிராப் கேட்டேன்" என்று சிடுசிடுப்பார்.



அதற்கு ரமேஷ், "வீரன்னு நினைச்சு ஆட்டோகிராப் கேட்டியா, இல்லை சேரன்னு நினைச்சுக் கேட்டியா?" என்பார்.

ரமேஷ் கிரிக்கெட் மேட்ச் ஆடிக் கொண்டிருப்பார். அதை ஆங்கிலத்தில் வர்ணிக்க செந்தமிழ் புலி அரசு என்பவர் வருவார். ஆனால் அவருக்குத் தமிழ் சரியாக வராது. தமிழில் ஸ்ருதி வர்ணனை செய்வார்.

ஸ்ருதி: வாவ்! ஜெர்ரி வெளுத்துக் கட்டுகிறார்.

செந்தமிழ்: Vow! Jerry is white washing.

ஸ்ருதி: பந்தை 'கிழிகிழி' என்று கிழிக்கிறார்.

செந்தமிழ்: All balls wear and tear.

ஸ்ருதி: எதிர் அணி கேப்டன் கௌசிக் முகத்தில் ஈயாடவில்லை.

செந்தமிழ்: No flies dance in Kaushik's face

நடிகை மும்தாஜ் நடிகையாகவே இதில் நடிக்கிறார். ரமேஷ் அவரது பரம ரசிகன். அவரைப் பார்க்க வேண்டும் என்ற ஆசையில் நிருபர் என்று பொய் சொல்லிக்கொண்டு ப்ரஸ்மீட்டுக்குள் நுழைந்து விடுவார். இதை மும்தாஜ் கண்டுபிடித்து, "எந்தப் பத்திரிகை?" என்று கேட்பார். அதற்கு ரமேஷ், "கல்யாணப் பத்திரிகை" என்று சமாளிப்பார். அருகிலிருந்த பத்திரிகையாளர் விடாமல், "கல்யாண பத்திரிகையா, கேள்விப்பட்





• 'ஜெர்ரி' படத்திலிருந்து...

டதேயில்லையே. வீக்லியா" என்பார். கூட வந்த மாதுபாலாஜி, "ஆமா சார். பத்திரிகை ரொம்ப வீக். சர்குலேஷன் ரொம்ப கம்மிதான்" என்பார்.

அதே ப்ரஸ்மீட்டில் இயக்குனரிடம் நிருபர்கள், எதற்காக ப்ரஸ்மீட் என்று கேட்பார்கள். அதற்கு இயக்குனர்,

"படத்தின் தலைப்பை மாற்றியுள்ளோம், அதற்காகத்தான் இந்த ப்ரஸ்மீட். முதலில் 'மழை பெய்ஞ்சு ஊரெல்லாம் தண்ணி' என்று டைட்டில் வைத்தோம். ஜோசியர், எனக்குத் தண்ணியில் கண்டம் என்றார். 'பெய்யெனப் பெய்யும் மழை' என்று மாற்றினோம். ஐந்துநாள் விடாத மழை.. படப்பிடிப்பு ரத்தானது. அதனால் 'சிறுதுளி பெருவெள்ளம்'னு இப்பொழுது டைட்டில் மாற்றியுள்ளோம்" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஜோசியரிடமிருந்து போன்கால் வரும். பேசி முடிந்தபின் இயக்குனர் மீண்டும் நிருபர்களிடம்,

"படத்தின் தலைப்பு மாறிவிட்டது. 'மழை வருது மழை வருது குடை கொண்டு வா...' இதுதான் படத்தின் புதிய டைட்டில்" என்பார்.

நிருபர்கள்: "என்ன சார், இப்போதுதானே வேறு டைட்டில் சொன்னீங்க?

இயக்குனர்: முன்பு சொன்ன டைட்டிலின் கூட்டுத்தொகை பதினாறாம். கூடவே கூடாதாம்.

நிருபர்கள்: இல்லையே, புது டைட்டிலின் கூட்டுத்தொகையும் பதினாறுதானே?

இயக்குனர்: தெரியும். அதை ஜோசியரிடம் கேட்டால், கூட்டாதிங்க. பிரச்னை ஓவர் என்று கூறிவிட்டார்."



படத்தில் நான் மும்தாஜின் ஆல் இன் ஆலாக வலம் வருவேன். நானும் ரமேஷும் ஒருநாள் பேசிக் கொண்டிருப்போம்.

"மும்தாஜை அஞ்சு வயசு வரைக்கும் இதே தோள்லதான் தூக்கி வளர்த்தேன்."

"அப்புறம் என்ன ஆச்சு?"

"இறக்கி விட்டேன். தானா வளர்ந்துட்டாங்க..."

- கிச்சு கிச்சு

படம்: ஸ்ரீஹரி

# நாடகக்காரி

குழந்தையைப் பார்த்தபோது உண்டான இரக்கத்தைக் காட்டிலும் தாயைப் பார்த்தபோது அதிக இரக்கம் உண்டாயிற்று. அந்த அம்மாளின் பேச்சும் குணமும் அவ்வளவு உயர்வாயிருந்தன. ஆனால் தேக நிலைமை மிக மோசமாயிருந்தது. அதிக காலம் உயிர் வாழ மாட்டாள் என்றே தோன்றியது. மூச்சு திணறிக்கொண்டு, உயிரைக் கையிலே பிடித்துக்கொண்டு பேசுகிறவளைப் போல், மெல்லிய குரலில் பேசினாள். ஊர் வம்பு பேசவில்லை; தன்னுடைய சோகக் கதையைச் சொல்ல ஆரம்பிக்கவும் இல்லை. பழைய காலத்து சங்கீதக்காரர்கள் - நாதஸ்வரக்காரர்களைப் பற்றியே பேசினாள். அப்போது அவர் முகம் மலர்ச்சி அடைந்ததைப் பார்த்து எனக்கும் திருப்தியாய் இருந்தது. இந்த மட்டும், சீக்கிரத்தில் இறந்து போகப் போகிற ஓர் அநாதை ஸ்திரீக்கு இந்த உதவியாவது நம்மால் செய்ய முடிந்ததே என்று சந்தோஷப்பட்டேன். நீலமணி பக்கத்தில் உட்கார்ந்து வெகு சுவாரஸ்யமாக எங்கள் பேச்சுகளைக் கேட்டுக் கொண்டிருந்தாள். விடைபெற்று புறப்பட வேண்டிய சமயம் நெருங்கியபோது நாஸுக்காக அவளுடைய உடம்பு குணமாகிற வரைக்கும் வீட்டுச் செலவு பற்றிக் கவலைப்பட வேண்டாமென்றும், எனக்குத் தெரிந்த டாக்டரை அனுப்பி வைத்தியம் பார்க்கச் சொல்வதாகவும் கூறினேன். கடைசியாக "அம்மா! நீ எவ்வளவோ நன்றாயிருந்தவள்; இப்போது இந்தக் கதிக்கு வந்துவிட்டாய். ஆனாலும் இந்தக் குழந்தையைப் பிச்சை எடுக்கப் போகச் சொல்வதை மட்டும் நிறுத்தி விடு. பள்ளிக்கூடத்துக்கு அனுப்பு!" என்றேன்.

"நானா போகச் சொல்கிறேன். ஐயா! வேண்டாம் வேண்டாம் என்றுதான் முட்டிக் கொள்கிறேன். கேட்காமல் போய் விடுகிறாள்!" என்று மரகதமணி கண்ணீர் ததும்பக் கூறினாள்.

அப்போது நீலமணி "மாமா! நான் பிச்சை எடுக்கப் போவதாக யார் உங்களுக்குச் சொன்னார்கள்?" என்று கணீர் என்ற குரலில் கேட்டாள்.

நான் சிறிது திகைத்துப் போனேன். குழந்தையைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு இந்தப் பேச்சை எடுத்திருக்கக் கூடாது என்று எண்ணினேன்.

மறுபடியும் அந்தக் குழந்தை "ஏன் மாமா! பதில் சொல்லுங்கள். நான் பிச்சை எடுப்பதாக யார் சொன்னார்கள்? நான் ஒன்றும் பிச்சை எடுக்கவில்லை!



## கந்தப்ப பிள்ளை சொன்ன கதைகள் - 11



கச்சேரி செய்து பணம் சம்பாதித்துக் கொண்டு வருகிறேன். இருநூறு ரூபாய் முந்நூறு ரூபாய் வாங்கிக்கொண்டு பாடினால் அது மட்டும் கச்சேரியா? இரண்டு அணா, மூன்று அணா வாங்கிக்கொண்டு பாடினால் அது பிச்சையா?'' என்றாள்.

நான் அதற்குப் பதில் சொல்ல முடியாமல் திணறிப் போனேன். என்னை அறியாமல் பூரிப்புப் பொங்கி வந்தது. அவள் தாயாரின் முகத்திலும் கொஞ்சம் புன்னகையைக் கண்டேன். கலகலவென்று சிரித்துக்கொண்டே குழந்தையைக் கட்டி அணைத்துக்கொண்டு ''நீ ரொம்பக் கெட்டிக்காரப் பெண்! பலே சமர்த்து! என்னுடன் வந்துவிடு! உன்னைப் பெரிய சங்கீதக்காரியாக்கி விடுகிறேன்'' என்றேன்.

அப்போது மரகதமணி ''அப்படியே செய்யுங்கள் ஐயா! இவளைச் சமாளிக்க என்னால் முடியவேயில்லை! நீங்கள் அழைத்துக்கொண்டு போங்கள்!'' என்றாள்.

பேச்சவாக்கில் ஏதோ சொல்லி வைத்தேன். அவ்வாறு காரியத்தில் நடந்தேறும்படி கடவுள் செய்துவிட்டார். ஆறு மாதத்துக்கெல்லாம் மரகதமணி இறந்து போனாள். இந்தக் குழந்தை பட்ட துயரத்தை என்னால் சொல்ல முடியாது. நல்ல வேளையாக அச்சமயம் நான் கும்பகோணத்தில் இருக்கும்படி கடவுளின் அருள் இருந்தது. தாயின் ஈமக்கடன்களை முடித்து விட்டுக் குழந்தையை என் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய்ச் சேர்ந்தேன்.

முதலில் என் வீட்டைச் சேர்ந்தவர்கள் கொஞ்சம் அருவருப்புக் காட்டினார்கள். யாரோ வீதியிலே திரிந்த பிச்சைக்காரப் பெண்ணைப் பிடித்துக்கொண்டு வந்து விட்டதாக முணுமுணுத்தார்கள். அதை நான் பொருட்படுத்தவில்லை. சில நாளைக்குள்ளேயே நிலைமை மாறி விடும் என்று அறிந்திருந்தேன். குழந்தை நீலமணி என் குடும்பத்தாரைச் சொக்குப் பொடி போட்டு மயக்குவது போல் மயக்கி விட்டாள். அவளுடைய குறுகுறுப்பான கண்களும், சுறுசுறுப்பான நடத்தையும், மழலைப் பேச்சும், இனிய பாட்டும் எல்லாரையும் வசீகரித்துவிட்டன. ''குழந்தையைக் கவனித்துக் கொள்ளுங்கள்'' என்று நான் சொல்ல வேண்டிய அவசியமில்லாமலே போய் விட்டது. அதற்குப் பதிலாக நான் நீலமணியை எதற்காவது கண்டிக்கும்படி நேர்ந்தால் என் வீட்டில் எல்லாரும் என் பேரில் பாய ஆரம்பித்து விடுவார்கள். சிறு குழந்தைகளுக்கு அளவுக்கு மீறிச் செல்லம் கொடுப்பது தவறு என்பதை நான் அறிவேன். அப்படி இடங்கொடுத்துக் கெட்டுப் பாழாய்ப் போன பெரிய மனிதர்கள் வீட்டுக் குழந்தைகள் எத்தனையோ பேரையும் எனக்குத் தெரியும். நீலமணியினுடைய குழந்தை வாழ்க்கையை உத்தேசிக்கும்போது அவளை ரொம்பவும் கண்டித்து வளர்க்க வேண்டிய அவ



அமரர் கல்கி

சியத்தையும் உணர்ந்திருந்தேன். ஆனாலும் ஒன்றும் பயன்படவில்லை. எனக்கே அந்த அநாதை குழந்தையைக் கண்டிக்கச் சாதாரணமாய் மனம் வருவதில்லை. எப்போதாவது அருமையாக அவனைக் கோபித்துக் கொண்டால் என் வீட்டில் எல்லாரும் என் பேரில் சண்டைக்கு வந்தார்கள்.

எப்படியோ குழந்தைக்கு நல்ல வார்த்தை சொல்லி தாஜா பண்ணிப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி வைத்தேன். வெகு நன்றாகப் படிப்பும் வந்து கொண்டிருந்தது. ஆனால் நடுநடுவில் பழைய பழக்க வழக்கங்கள் வந்து கொண்டிருந்தன. திடீரென்று ஒரு நாள் பள்ளிக்கூடத்திலிருந்து காணாமற்போய் விடுவான். வீட்டுக்கு வரவேண்டிய சமயத்திற்கு வர மாட்டான். ஊரில் உற்சவம் ஏதாவது நடந்தால் அங்கே வேடிக்கை பார்க்கப் போய் விடுவான். பாட்டுப் பாடிக் காசு வாங்கவும் ஆரம்பித்து விடுவான். சில சமயம் ரெயில்வே நிலையத்துக்குப் போய் ரெயில் ஏறிப் பாடத் தொடங்கி விடுவான். இரண்டு மூன்று ஸ்டேஷன் பாடிக்கொண்டு போய் விட்டு, "குழந்தையைக் காணோமே?" என்று எல்லாரும் கவலையுடன் தேடிக் கொண்டிருக்கும் சமயத்தில் கையில் எட்டணா ஒரு ரூபாய்க் காசுடன் திரும்பி வருவான்.

நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். "குழந்தே! நான் இந்த ஊரில் கௌரவமாய் வாழ்க்கை நடத்து





கிறேன்! என் மானத்தை வாங்காதே!" என்று அடிக்கடி எடுத்துச் சொன்னேன்.

"நான் எங்கேயோ கிடந்து வந்தவள் என்று தான் எல்லாருக்கும் தெரியுமே, மாமா! உங்களுக்கு என்னால் கௌரவக் குறைவு எப்படி ஏற்படும்?" என்று அவள் ஒரு சமயம் பதில் சொல்வாள்.

இன்னொரு சமயம், "ஏன், மாமா! நீங்கள் கச்சேரிக்குப் போய் நூறு இருநூறு சம்பாதித்துக் கொண்டு வருகிறீர்களே? அதில் கௌரவக் குறைவு ஒன்றும் இல்லையே? அதுபோல் நானும் எனக்குத் தெரிந்த பாட்டைப் பாடிக் கச்சேரி செய்து என்னால் இயன்றதைச் சம்பாதித்துக் கொண்டு வருகிறேன். இதில் என்ன பிசகு?" என்பாள்.

இன்னும் ஏதாவது நான் கடுமையாகப் பேசிவிட்டால், ஒரு நாள் என் வீட்டை விட்டு, ஊரை விட்டே ஓடிப் போய் விடப் போகிறாளோ என்ற பயம் எனக்கு உண்டாகிவிட்டது.

அதற்குப் பிறகு, "நடக்கிறது நடக்கட்டும்; கடவுள் இருக்கிறார்!" என்று விட்டுவிட்டேன்.

ஏழெட்டு வருஷ காலம் என் பராமரிப்பிலேயே நீலமணி வளர்ந்து வந்தாள். அந்தக் குழந்தைக்குச் சங்கீதத்தில் இயற்கையாக உள்ள ஞானத்தை அறிந்திருந்தபடியால் பாட்டு வாத்தியார் வைத்துப் பாட்டுச் சொல்லிக் கொடுக்கவும் ஏற்பாடு செய்தேன். சங்கீதம் என்னமோ அவளுக்கு நன்றாய்த் தான் வந்தது. ஆனால் பாட்டு வாத்தியார்களோடு எப்போதும் சண்டை தான். ஸரளி வரிசை, கீதம், வர்ணம் என்று வரிசைக் கிரமமாகப் பாட்டு ஆரம்பிப்பார். அவற்றையெல்லாம் நீலமணி சரியாகப் பாடம் பண்ண மாட்டாள். "அந்தக் கீர்த்தனத்தைச் சொல்லிக் கொடுங்கள்! இந்தப் பாட்டைப் பாடிக் காட்டுங்கள்!" என்று ஆரம்பித்து விடுவாள். பாட்டு வாத்தியார்களுக்குப் போதும் போதும் என்று ஆகிவிடும். "இந்தப் பெண்ணுக்குச் சொல்லிக் கொடுக்க எங்களால் ஆகாது" என்று போய் விடுவார்கள். இம்மாதிரி ஐந்து பாட்டு வாத்தியார் மாற்ற வேண்டியதாயிற்று.

நானும் சில சமயம் சொல்லிக் கொடுக்கப் பார்ப்பேன். அதாவது, சொல்லிக் கொடுக்கிற பாவனையாக நீலமணியைப் பாடச் சொல்லிக் கேட்பேன். "பாட்டு வாத்தியார்கள் கெட்டார்கள். இந்தக் குழந்தைக்கு வந்திருக்கிற சங்கீதம் வேறு யாருக்கு வந்திருக்கிறது? பெரிய பெரிய வித்வான்கள் பிரமிக்கும்படியான பாட்டு அல்லவா இது? சங்கீத தெய்வத்தின் அருளினால் வந்த சங்கீதம் அல்லவா இது?" என்று மனத்தில் எண்ணிக் கொள்வேன். வெளிப்படையாகச் சொன்னால்



குழந்தை கொஞ்சம் முறையாகக் கற்பதும் நின்றுவிடப் போகிறதேயென்று பயந்து மனத்திற்குள்ளேயே வைத்துக் கொள் வேன்.

நீலமணிக்கும் பதினேழு வயது ஆயிற்று. "இந்தப் பெண்ணை இனி மேல் என்ன செய்வது?" என்ற கவலை என் மனத்தில் உண்டாகத் தொடங் கியது.

இந்த நிலைமையில் நான் யாழ்ப் பாணத்திற்கு ஒரு கச்சேரிக்குப் போகும் படி நேரிட்டது. யாழ்ப்பாணத்துக் காரர்கள் நல்ல சங்கீத ரஸிகர்கள் என் பது உங்களுக்குத் தெரிந்ததுதானே? சங்கீதத்திலேயும் நாதஸ்வர சங்கீதத் தில் அவர்களுக்கு மோகம் அதிகம். வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்ற வேற்றுமை மனோபாவம் அவர் களிடம் கிடையாது. தமிழ்நாட்டி லிருந்து பிரபல நாதஸ்வர வித்வான்கள் எல்லாரையும் அடிக்கடி கோயில் உற்சவங்களுக்கு வரவழைப்பார்கள். எல்லாருடைய வாசிப்பையும் நன் றாகக் கேட்டு ஆனந்திப்பார்கள். நாதஸ்வர வித்வான் யாரைக் கூப்பிட்டாலும் தவுலுக்கு மட்டும் தவறாமல் என்னைக் கூப்பிடுவார்கள்.

என் குடும்பத்தார் அடிக்கடி தங்களையும் ஒரு முறை இலங்கைக்கு அழைத்துப் போகும்படி கேட்பதுண்டு. நானும் 'ஆகட்டும் ஆகட்டும்' என்று தட்டிக் கழித்து வந் தேன். இந்தத் தடவை மூன்று உற்சவக் கச்சேரிகள் சேர்ந்தாற்போல் வந்தபடியால் சுமார் இருபது நாள் இலங்கையில் நான் தங்க வேண்டியிருந்தது. குடும்பத்தை அழைத்துப் போவதற்கு இதைவிட நல்ல சந்தர்ப்பம் கிடைக்காது என்று எண்ணி எல்லோருமாகப் போகத் தீர்மானித்தோம். சில காலமாக நீலமணி மிக்க உற்சாகக் குறைவுடன் இறுக்குப் பிடித்தவள் போல் இருந்தாள். "ஒரு நாள் நம்முடைய மானத்தை வாங்கிவிட்டு ஓடி விடு வாளோ?" என்று கூட எண்ணினேன்.

உண்மையைச் சொல்லப் போனால் நீல மணியை உத்தேசித்தே குடும்பம் முழுவதையும் அழைத்துப் போக முடிவு செய்தேன்.

இலங்கை பிரயாண செய்தி அறிந் ததும் நீலமணி உற்சாகம் அடைந்தாள். "பிரயாணம் என்றைக்கு மாமா?" என்று அடிக்கடி கேட்டுத் துளைத்துக் கொண் டிருந்தாள். கடைசியாகப் பிரயாண நாளும் வந்தது.

இந்தக் காலத்தைப் போல ஆகாச விமானத்தில் ஏறிச் சில மணி நேரத்தில் இலங்கை போய் இறங்குகிற வசதி அப் போது கிடையாது. பிரயாணத்தில்



எவ்வளவோ அசௌகரியங்கள் இருந் தன. சில சமயம் நரக வேதனையாகவே இருந்தது. எங்கள் கோஷ்டியில் அசௌ கரியம் ஒன்றையும் பொருட்படுத்தாமல் ஒரே உற்சாகத்துடன் இருந்தவள் நீலமணி ஒருத்திதான்.

இதன் காரணம் எனக்குப் பின்னால் தெரிந்தது. நீலமணியின் தாயார்

மரகதமணி அம்மாள் சந்தோஷமாக வாழ்ந்த நாளில் அவளும் நீலமணியின் தகப்பனாரும் இலங்கைக்கு வந்திருந்தார்களாம். அந்த அழகான தீவில் பல இடங்களுக்குப் போயிருந்தார்களாம். அங்கே அவர்கள் பார்த்த அதிசயங்களையெல்லாம் பற்றி அடிக்கடி மரகதமணி தன் அருமை மகளுக்குச் சொல்வதுண்டாம். ''அப்போதெல்லாம் அம்மாவின் முகமே தனியான களை பெற்று விளங்கும்'' என்றான் நீலமணி. சின்னஞ்சிறு அதிசயங்கள் நீலமணியின் உள்ளத்தை அவ்வளவுக்குக் கவர்ந்து விட்டிருந்தன. அதனாலேதான் இலங்கைப் பிரயாணம் என்றதும் அவ்வளவு துடிதுடித்தான். இதையெல்லாம் கொழும்புக்குச் சென்ற பிற்பாடுதான் நீலமணி சொல்லி நான் தெரிந்து கொண்டேன்.

**'அதிரூப மோகனாங்கி' 'குலோப்ஜான் வைஜயந்தி' 'பூலோக அற்புத அரம்பை' முதலிய புதுமையான நாடகங்களை அரங்கேற்றிப் புகழ் பெற்றான்.**

ஆம்; முதலிலே கொழும்பிலேதான் எனக்குக் கச்சேரி இருந்தது. நாலு நாளைக்குப் பிறகு யாழ்ப்பாணத்தில் கச்சேரி. கொழும்புக் கச்சேரி முடிந்ததும் நீலமணியையும் என் குடும்பத்தினரையும் அழைத்துக்கொண்டு அந்த அழகிய நகரைச் சுற்றிக் காட்டப் புறப்பட்டேன்.

இதற்கிடையில் கொழும்பு அப்போது தமிழ்நாட்டில் பிரபலமாயிருந்த நமச்சிவாயம் கம்பெனியாரின் நவீன நாடகங்கள் நடந்து கொண்டிருந்தன என்று கேள்விப்பட்டேன்.

சில காலம் தமிழகத்தில் மிகப் பிரசித்தி பெற்றிருந்த நமச்சிவாயம் நாடகக் கம்பெனியைப் பற்றி நீங்கள் அவசியம் அறிந்திருப்பீர்கள். நமச்சிவாயம் சிறுபிள்ளை. வசீகரமான நல்ல குணம் வாய்ந்த பிள்ளை. முதலில் அவன் 'புதுக்கோட்டை மீனலோசனி கானவர்த்தினி ஒரிஜினல் பாலமோகன பரமானந்தா டிராமா கம்பெனி'யில் நடித்துக்கொண்டிருந்தான். சீக்கிரத்தில் பெயரும் புகழும் பெற்றான். அவனை எத்தனையோ போட்டி நாடகக் கம்பெனிகள் அதிகப் பணம் கொடுத்துக் கொத்திக்கொண்டு போகத் தயாராயிருந்தன. ஆனால் அப்போதே பையன் நமச்சிவாயம் தன் வாழ்க்கையின் துருவ நட்சத்திரத்தைத் தெரிந்து கொண்டிருந்தான். சொந்தத்தில் நாடகக் கம்பெனி வைத்துநடத்தி உலகத்தையே ஓர் ஆட்டு ஆட்டி வைத்துவிட வேண்டுமென்ற இலட்சியத்தைக் கொண்டிருந்தான். ஆகையால் மைனர் பருவம் முடிந்தவுடனேயே நாடகக் கம்பெனி நடத்திப் பெயர் வாங்கினான். 'அதிரூப மோகனாங்கி' 'குலோப்ஜான் வைஜயந்தி' 'பூலோக அற்புத அரம்பை' முதலிய புதுமையான நாடகங்களை அரங்கேற்றிப் புகழ் பெற்றான். தமிழ்நாட்டிலேதான் இப்படியென்றால் இலங்கையிலுள்ள தமிழர்களையெல்லாம் அவனுடைய நாடகங்களின் மூலம் பைத்தியமாக அடித்துவிட்டான்.

அப்படிப்பட்ட ஜகப் பிரசித்தி பெற்ற நமச்சிவாயம் கொழும்பு நகரில் நாடகங்கள் நடத்திக் கொண்டிருந்தான். என் கச்சேரி நடந்த மறுநாள் குடும்பத்துடன் நான் நாடகம் பார்க்கப் போயிருந்தேன். நமச்சிவாயத்தை எனக்கு முன்னாலேயே நன்றாகத் தெரியும். பழைய மீனலோசனி கம்பெனியில் என் கையினால் ஒரு தடவை மெடல் வாங்கியிருக்கிறான். கொட்டகையில் என்னை அவன் பார்த்து விட்டு கண் பார்வையினாலே வியப்பையும் மரியாதையையும் தெரிவித்துக் கொண்டான். மறுநாள் நாங்கள் தங்கியிருந்த ஜாகையில் எங்களைப் பார்க்கவும் வந்துவிட்டான். விதி என்று சொல்லுகிறார்களே, அது இதுதான் என்று பிற்பாடு தெரிந்து கொண்டேன்.

(தொடரும்)



ஆர்.சி.ஜெயந்தன் கவிதைகள்
காரியம் முடித்து
குளக்கரையில் விட்டுப்போன
குட்டி'பூண்டு பானைகள்
ஒட்டடை படிந்து
காத்துக்கிடக்கின்றன
மண்சோறு சமைத்து
விளையாட வரும்
பிள்ளைகளின் தடம் பார்த்து...
எங்கோ
உழுது கிளர்ந்த
புழுதி நிலத்தைத்
தழுவிப் புணரும் மழை
தாங்கி வருகிறது காற்றில்
டை - அமோனியம் வாசனை

# மண்



- உளுந்தும் நெல்லும்
  உறங்கும்
  பட்டறைகளை
  விடிய விடிய
  விழித்திருந்து
  பாதுகாக்கும்
  அம்பாரங்கள் நிறைந்திருந்த
  கழனிகளின் நடுவே
  கள்ளர்களைப் போல
  பதுங்கியிருக்கின்றன
  பிளாட் கற்கள்

- நடுகல் பிடுங்கி எறிந்து
  ரசிகர் மன்றப் பலகை நாட்டும்
  இளவட்டம் அறியுமா
  மண்ணின் புண்!

ஓவியம்: அனந்தபத்மநாபன்



## விஸிட்

“உலகம் தெரி யாதவனுக்குப் பேரு வெகுளி...
கிரிக்கெட்டே தெரியாத வனுக்குப் பேரு... சங்குலி”

“நீ என்ன தி.க. ஆளா...?”
“ஏன் கேட்கறீங்க...”
“இல்ல... செருப்புப் போட் டுக்கிட்டே பிள்ளையாருக்குத் தோப் புக்கரணம் போடறியே.. அதான் கேட்டேன்”

இந்த ரெண்டு ஜோக்குகளும் என்னோடது இல்லப்பு... எஸ்.வி. சேகரோட 'எல்லாமே தமாஷ்தான்' டிராமாவுல ஏகப்பட்ட கைதட்டலை வாங்கித் தந்த ஜோக்குங்கதான் இந்த ரெண்டும்... ஆமாப்பு... சிட்டில மூலைக்கு மூலை இசைக்கச்சேரிங்க பின்னி பெடலெடுத்துக்கிட்டு இருக்கு துங்க... அதுக்குப் போயி போயி ரொம்ப போரடிச்சதா... ஒரு சேஞ்சா இருக்கட்டுமேன்னு அப்படியே நம்ம கலைவாணர் அரங்கம் பக்கமா போனா அங்க இந்த டிராமா... சரிதான்னு உள்ள போயி உட்கார்ந்து கொஞ்ச நேரம் ரிலாக்ஸ் பண்ணிட்டு

## “அம்ம[illegible]





வந்தேம்பு. அப்படியே ரெண்டு பக்கம் மேட்டரும் தேறிச்சு, ஜாலியாவும் பொழுது போச்சு.

1980ல போட்ட நாடகமா இருந் தாலும் கூட, போரடிக்காம நல்ல நல்ல டைமிங் ஜோக்கால நைஸா கொண்டு போறாங்கப்பு. ஆனா கா்மெடின்ற பேர்ல சமயம் கிடைக்குறப்போல்லாம் கலை ஞரையும் சன் டி.வியையும் வாரி வாரி அவங்க வயித்தெரிச்சலைக் கொட்டிக் கறாங்க.

இப்படித்தான் ஒரு சீன்ல, “நான் எல்லாத்தையும் மனசுல அப்படியே அமுத்தி வச்சுக்கிட்டு, சமயம் கிடைக் கறப்போலலாம் பழிவாங்கிடுவேன்... ஏன் தெரியுமா... என் ஊரு கோபால புரம்”னு சொல்லி கலைஞரை சீண்டு றாரு பாருங்க... செம ரெஸ்பான்சு...

அதேபோல இன்னொரு சீன்ல, “நாளைக்கு சன்டேவாச்சே... உலகத் தொலைக்காட்சிகளில் முதன்முறை யாக ஒரு படம் போடுவாங்களே... அதைப் பார்த்து நொந்து போகலையா... ச்சீ.. பார்க்கப் போகலையா”ன்னு சன் டி.வியை நக்கலடிச்சாரு... அதுக்கும் அங்கங்க சில கைதட் டல்கள்.

“ஏம்ப்பா... தமிழ்நாட் டுல ஹீரோன்னா அம் பது வயசுக்கு மேலதான் இருக்கணுமா...? யூத்துக்கு

# "பயமிருக்கணும்!"

— ஒற்றன்

வழிவிட்டு கிளம்புங்கப்பா...'' இப்படிச் சில பன்ச் டயலாக்குகளை வேற அள்ளி விட்டாங்கப்பு...

டிராமால அப்பப்போ ஆர்டிஸ்டுங்க டயலாக்கை மறக்கற மாதிரி சீன்ல, அதை அழகா அட்ஜெஸ்ட் பண்ற சேகரு அதுக்காக டிராமா





முழுக்க தானே டாமினேட் பண்றது டூ மச்னு ஒரு கொரலு கேட்டுச்சு... நோட் பண்ணிக்கோங்கப்பு.

தான் ஒரு ரத்தத்தின் ரத்தம்ங்கறதை அப்பப்போ நிரூபிக்க வேண்டிய கட்டாயம் இவருக்கு... அதனால்தான், ''அம்மாகிட்ட பயம் இருந்தாதான் நீங்கள்ளாம் உருப்படுவீங்க... ஆனா அதுக்காக பயந்த மாதிரி ஆக்ட் குடுத்தீங்க... அடி பின்னிடுவாங்க''ன்னு ஒரு சீன்ல அம்மாவுக்கு ஒரு ஐஸ் பார் டயலாக்கை விட்டாரு... இது அம்மா காதுக்குப் போகுமா...?

டிராமா பூரா ஜனங்க கைதட்டிச் சிரிக்கறதுக்கு நிறைய சரக்கு இருக்கு... குறிப்பா டைமிங் மற்றும் பொலிட்டிகல் ஜோக்குகள்.. அதுக்கே நல்ல வரவேற்பு இருக்கறப்போ எதுக்கு ஆபாச சைகை வேற செய்து இம்சை பண்றீங்க... அதனால ஏகப்பட்ட பேரு முகம் சுளிக்கறாங்களே தவிர சிரிக்கற மாதிரி தெரியலியே... ஒரு வேளை இதுக்குப் பேர்தான் எல்லாமே தமாசா... பேஷ்... பேஷ்... எப்படி இருந்தாலும் இதுதான் இந்த டிராமாவோட மிகப் பெரிய மைனஸ்... நோட் திஸ் செகண்ட் பாயிண்ட்.

டிராமாவைப் பார்க்க வர்றவங்களுக்கு இலவசமா பிளட் ஷுகர் செக்கப் பண்ணறதுக்கு ஏற்பாடு பண்ணியிருந்தாங்க. ஓரளவுக்கு ரெஸ்பான்சும் இருந்துச்சு. 'எப்படியோ இப்படிப்பட்ட பிஸியான மியூசிக் சீஸன்ல டிராமாவுக்கு வர்றாங்களே... அதுவே பெரிய விஷயம்தான். ஆனா அதைக் காப்பாத்திக்க வேண்டியது அவங்கவங்க பொறுப்பு'ன்னு சொல்லிட்டு கிளம்பினாரு ஒரு பெரியவரு... அவர் சொல்றது சரின்னுதான் எனக்கும் தோணிச்சப்பு.

படங்கள் : ஸ்ரீஹரி

# வெற்றிக்

சென்னை, தி.நகரிலுள்ள 'லக்ஷ்மி பேர்ல்ஸ் அண்ட் ஜுவல்ஸ்' நிறுவனர் சைதய்யா தொண்டபூவிடம் வெற்றிக் கதையைக் கேட்டால் சினிமா கதை பாணியில் தன் போராட்டங்களை சுவாரஸ்யமாக அடுக்குகிறார்.

"தனிமரமாகத் தள்ளாடிக் கொண்டிருந்த எனக்கு, மனித உருவிலிருந்த மூன்று தெய்வங்கள் வழிகாட்டினார்கள். அவர்களைப் பற்றி கோடிட்டுக் காண்பித்தாலே போதும், என் கதை வெளிப்பட்டு விடும்.

**அர்ஜுன்தாஸ்** : இவர் என்னை முதன் முதலாக ஹைதராபாத் நீதிமன்றத்தில் சந்தித்தபோது நான் குற்றவாளிக் கூண்டில் நின்றிருந்தேன்.

ஆந்திராவின் குண்டூர் மாவட்டத்தைச் சேர்ந்தவன் நான். நான்கு வயதில் தாயையும் பன்னிரண்டு வயதில் தந்தையையும் இழந்தவன். படிப்பு என்றால் எனக்கு உயிர். ஆனால் சித்தப்பா என்னை மளிகைக் கடையில் தள்ளினார். மகனாக நினைக்க வேண்டாம். மனிதனாக மதிக்கலாம் அல்லவா? ஒரு சம்பவத்தில் என்னை கீழ்த்தரமாக நடத்தினார். 'வீட்டை விட்டுக் கிளம்புகிறேன்' என்று தைரியமாகச் சித்தப்பாவிடம் சொன்னேன். கட்டி வைத்து



• சைதய்யா தொண்டபூ

அடித்தார். 'என் அப்பாவின் எந்த சொத்தும் பாக்கியில்லை' என்று எழுதி வாங்கிக் கொண்டு விரட்டியடித்தார். ஹைதராபாத்தில் வேலை தேடி அலைந்து ப்ளாட்ஃபாரத்திலேயே வாழ்க்கையைக் கழித்தபோதுதான் ஒரு நாள் போலீஸ் மடக்கியது. நீதிமன்றக் கூண்டில் நிறுத்தி வைக்கப்பட்டேன். 'அய்யா, சாப்பிட்டு பல நாள் ஆச்சு' என்று நீதிபதியிடம் கதறியது பார்வையாளர் வரிசையில் உட்கார்ந்திருந்த அர்ஜுன்தாஸ் காதில் விழுந்தது. நீதிமன்றத்தில் சொல்லி என்னைக் காப்பாற்றினார். அவர் ப்ளாட்ஃபாரத்தில் துணிக்கடை நடத்துபவர். அதில் எனக்கும் வேலை தந்தார்.

ஒரு சமயம், வியாபார விஷயமாக சென்னை வந்தபோது காதி பவனில் வலம்புரி சங்கு விற்பது கண்ணில் பட்டது. 'இதையெல்லாம் கூடவா விற்பார்கள்?' என்று சிரித்துக் கொண்டேன். ஆந்திராவிலுள்ள ஸ்ரீசைலம் தேவஸ்தானத்தில் துணி விற்றுக் கொண்டிருந்தபோது எனக்குக் காய்ச்சல் ஏற்பட்டது. கோயிலிலேயே சுருண்டு படுத்துக் கிடந்தேன். அந்தச் சமயம் என் உறவினர் ஒருவர் அங்கு வந்தார். என்னைக் காப்பாற்றுவார் என்றெண்ணி கை நீட்டினேன். குரல் கொடுத்தேன். காதில் வாங்காமல் சென்றுவிட்டார் அந்த நல்ல மனிதர். உடைந்து போனேன். கடவுளைத் திட்டினேன். அந்தச் சமயம் ஒருவர் என்னிடம் வந்து, "சென்னை பீச்சில் பத்து ரூபாய்க்கு வலம்புரி சங்கு விற்பார்கள், வாங்கி வா. உனக்கு இருபது ரூபாய் தருகிறேன்" என்றார். அர்ஜுன்தாஸ் மனதார சென்னைக்கு அனுப்பினார். பதினாறு வயதில் என் வியாபாரம் தொடங்கியது.

**புஷ்பம்மா** : தமிழ் தெரியாது.

வியாபாரமும் தெரியாது என திரிசங்கு நிலையில் சென்னையில் தவித்துக் கொண்டிருந்த எனக்கு ஆதரவளித்தவர் புஷ்பம்மா. இவர் காதிபவன் உயர் அதிகாரி. ஆரம்பத்தில் கமால் என்கிற பெரியவரின் உதவியோடுதான் நான் சங்கு வியாபாரத்தை ஆரம்பித்தேன். கமால் எனக்கு ஐம்பது ரூபாய்க்கு மூன்று சங்குகள் விற்றார். அதை நான் ஆந்திராவில் நூற்றி ஐம்பது ரூபாய்க்கு விற்றேன். நல்ல லாபம். அடுத்தது நேரே காதிபவன் சென்று புஷ்பம்மாவைச் சந்தித்தேன். 'நீங்கள் ஐநூற்று ஐம்பது ரூபாய்க்குக் கொடுக்கும் சங்கை முந்நூற்று ஐம்பது ரூபாய்க்குத் தருகிறேன்' என்றேன். ஆச்சர்யமடைந்தார். எனக்கு எட்டாயிரம் ரூபாய்க்கு ஆர்டர் கொடுத்தார். என்னை நம்பி எப்படி அவ்வளவு பெரிய தொகைக்குக் கொடுத்தார் என்று இன்றைக்கும் ஆச்சர்யப்படுகிறேன்.

லட்சுமி : என் அம்மாவின் பெயர்தான் லட்சுமி. அம்மாவின் முகம் கூட எனக்குச் சரியாக ஞாபகம் இருந்ததில்லை. ஆனால் இறந்தும் எனக்கு வாழ்க்கை கொடுத்தவர். புஷ்பம்மா மூலமாக எட்டாயிரம் ரூபாய்க்கு காதி ஆர்டர் கிடைத்ததும் பணத்துக்கு வழியின்றித் தவித்தேன். அம்மாவின் தாலி, சித்தப்பாவிடம் இருந்தது ஞாபகத்துக்கு வந்தது. தைரியமாக குண்டூர் சென்றேன். "தாலியைத் தராவிட்டால் கிருஷ்ணா நதியில் குதிப்பேன்" என்று கதறினேன். மூவாயிரம் ரூபாய்

* குடும்பத்துடன்...



# கொடி கட்டு!



"பார்லிமெண்டில் நான் வாயையே திறப்பதில்லை என்று என்னைக் கிண்டல், கேலி செய்த எதிர்க்கட்சிக்காரர்களே... நான் எவ்வளவு நேர்மையானவனாக இருந்திருக்கிறேன் என்பது உங்களுக்கு இப்போதாவது புரிகிறதா?..."

- கே. ஆனந்தன்

கொடுத்தார்கள்.

மீதி பணத்துக்கு கமால் உதவினார். அவரிடமே ஐந்தாயிரம் ரூபாய்க்கு சங்குகள் வாங்கி, பின்னர் பன்னிரண்டாயிரம் ரூபாய்க்கு காதியில் பில் கொடுத்தேன். மீண்டும் குண்டூர் சென்று போராடி தாலியை மீட்டு, விற்றேன். ஏழாயிரம் ரூபாய் கிடைத்தது. இனி குண்டூரிலேயே மணிகைக் கடை வைக்கலாம் என்று முடிவெடுத்தேன். அதற்குப் பணம் போதவில்லை. திருமணம் செய்தால் பத்தாயிரம் ரூபாய் வரதட்சணை கிடைக்கும் என்றார்கள். எனக்கு வீடு கொடுத்தவரின் மகளையே திருமணம் செய்தேன். (ஆனால் தாலியாகவும் நகையாகவும் தான் பத்தாயிரம் ரூபாய் வந்தது. திருமணத்தால் கூடுதல் செலவு உண்டானதுதான் மிச்சம்)

ஏதும் பிடிபடவில்லை. 1986-ம் வருடம் மனைவியோடு சென்னைக்குள் காலடி எடுத்து வைத்தேன். சங்கு, ருத்ராட்ச மாலை, ஸ்படிக மாலை போன்றவற்றை காதி பவனுக்கு தொடர்ந்து சப்ளை செய்து வந்தேன். அப்பொழுது என் நண்பர் ஒருவர் கடனாகத் தரவேண்டிய பணத்துக்கு பதிலாக முத்து மாலைகளை அளித்தார். அதை சென்னையில் விற்றபோது எனக்கு வரவேண்டிய பணத்தை விடக் கூடுதலாக ஆயிரம் ரூபாய் கிடைத்தது. மூளையில் மின்னல் உருவானது. இக்கட்டில் உதவிய அம்மாவின் நினைவாக 91-ம் வருடம் தி.நகரில் உருவானது லட்சுமி பேர்ல்ஸ் அண்ட் ஜுவல்ஸ்.

சென்னைக்கு முத்து, பவளங்களைப் பரவலாக அறிமுகப்படுத்திய பெருமை எங்களையே சாரும். இந்த வியாபாரத்தில் முந்நூறிலிருந்து நானூறு சதவிகிதம் வரை மார்ஜின் கிடைக்கும். ஆனால் எனக்கு அதிக லாபம் தேவையில்லை. அதிக டர்ன்-ஓவர்தான் வேண்டும். நடுத்தர மக்களிடம் முத்து-பவள நகைகள் போய்ச் சென்றடைய வேண்டும் என்கிற நோக்கில் ரேஷன் கார்டு கொண்டு வந்தால் மட்டுமே நகைகள் என்று ஒருமுறை அறிவித்தேன். கூட்டம் அலை மோதியது. க்யூவில் நின்று வாங்கினார்கள்.

இந்தியாவுக்கு, முத்து சைனாவிலிருந்து இறக்குமதி ஆகிறது. மும்பை வழியாக ஹைதராபாத்துக்கு வந்து நகைகளாக மாற்றப்படுகிறது. வியாபாரத்தில் நான் இடைத்தரகர்களை நம்புவதில்லை. நேராக மும்பையிலிருந்தே பொருள்களைத் தருவிக்கிறேன். இதனால்தான் சென்னையிலேயே குறைந்த விலைக்கு விற்க முடிகிறது.

எங்களிடம் முத்து, பவள நகைகள், போல்கி கல் நகைகள், குந்தன் நகைகள் என செயற்கை நகைகள் ஏராளமாக உள்ளன. பணக்காரர்கள் பணமிருக்கிற தெம்பில் தங்கம் வாங்குகிறார்கள். நடுத்தர, ஏழை மக்கள் ஏன் அந்த மாயையில் விழ வேண்டும்? தங்கத்தில் செலவழிக்கும் பணத்தை வங்கியில் போடலாமே? செயற்கை நகையிலும் பளபளப்பைக் காண்பிக்கலாமே!

இன்று நாங்கள் பதினாறாவது ஆண்டு விழாவைக் கொண்டாடுகிறோம். நாளுக்கு நாள் வளரும் தொழில் இது. சென்னையில் இன்னமும் இருபது முத்து - பவளக் கடைகள் தொடங்கினாலும் ஜெயிக்கும். இன்று என் வசம் தொழில் இருக்கிறது; பணம் இருக்கிறது. விலகிச் சென்ற உறவினர்களும் அருகே வந்து விட்டார்கள். இதுதான் உலகம்."

- ச.ந.கண்ணன்

படங்கள் : ஓம்

# மகாராணி!

தொகுப்பு : **கௌதம்ராம்**

"**நா**கிரெட்டி தயாரித்த மிஸ்ஸியம்மா, தமிழிலும், தெலுங்கிலும் ஒரே நேரத்தில் எடுக்கப்பட்டது. தமிழில் ஹீரோ ஜெமினி கணேசன். தெலுங்கில் என்.டி.ஆர். இருவருக்குமே ஜோடியாக பானுமதி ராமகிருஷ்ணா ஒப்பந்தம் செய்யப்பட்டார். படத்தின் பாடல்களை அப்போது பிரபலமாக விளங்கிய பி. லீலா பாட வேண்டும் என்று நினைத்தார் நாகிரெட்டி. அதற்கு பானுமதி ஒப்புக்கொள்ளவில்லை. 'எனக்கு இன்னொரு பாடகி பாடுவதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது' என்று திட்டவட்டமாகச் சொல்லி விட்டார்.



பெரிய கம்பெனி, பிரபல ஹீரோக்கள். ஆனாலும் தனக்குரிய அங்கீகாரம் தரப்படவில்லை என்பதால், நடிக்க மறுத்து விட்டார். அதன்பின் பானுமதிக்குப் பதிலாக சாவித்திரி ஹீரோயின் ஆனார்" என்று அண்மையில் மரணமடைந்த பானுமதி ராமகிருஷ்ணா குறித்து நினைவுகூர்கிறார் ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்.

"**அ**வருக்குத் தனது அழகு, மற்றும் பர்சனாலிட்டி குறித்து பெருமிதம் எப்போதும் உண்டு. அவரை பண விஷயத்தில் ரொம்பக் கறாரானவர் என்று சொல்வார்கள். எனக்குத் தெரிந்து, தனது தலையணைக்குக் கீழே எப்போதும் சில ஆயிரம் ரூபாய் வைத்திருப்பார். உதவி கேட்டு வருபவர்களுக்கு அதிலிருந்து பணம் கொடுத்து உதவுவார்.

'சண்டிராணி' படத்தை தமிழ், தெலுங்கு, இந்தி என மூன்று மொழிகளில் முதல் முறையாக கதை வசனம் எழுதி, இயக்கியதுடன் சொந்தமாகத் தயாரித்தார். மூன்று படங்களும் சூப்பர் டூப்பர் ஹிட்டாகி, பானுமதியைப் புகழின் உச்சிக்குக் கொண்டு போயின. பானுமதிக்கு நடிப்பில் அடக்கி வாசிக்கவும் தெரியும்; ஆரவாரமாகவும் நடிக்கத் தெரியும். ஆனாலும், அவரது ஆரவாரமான நடிப்பையே மக்கள் பெரிதும் விரும்பினார்கள். பல படங்களில் அவரது நடையும், உட்காரும் ஸ்டைலும் ரசிகர்களை ஆர்ப்பரிக்க வைக்கும்" என்கிறார் முக்தா சீனிவாசன்.

"**பா**னுமதி விஷ்ணு பக்தர் குறித்த கதையை 'விப்ரநாராயணா' என்ற படமாய் எடுத்தார். அதில் நாகேஸ்வரராவை நடிக்க வைத்தபோது, 'நாத்திகரான நாகேஸ்வரராவை, விஷ்ணு பக்தராக நடிக்க வைத்திருக்கிறீர்களே!' என்று சிலர் பானுமதியிடம் சொன்னார்கள். ஆனால், பானுமதி அதையெல்லாம் சட்டையே செய்யவில்லை. 'விப்ரநாராயணா' படம் எனக்கு பெரும் புகழைப் பெற்றுத் தந்தது! மகாராணி போல வாழ்ந்தவர் பானுமதி!" என்று நினைவுகூர்கிறார் தெலுங்குத் திரையுலக ஜாம்பவானான நாகேஸ்வரராவ்!



# குருராஜன்

"ஏங்க, வினயாவைக் காணோங்க. வீடு பூரா தேடிப் பார்த்துட்டேன். அவ புத்தகத்திலே இந்தக் கடிதம்தான் வெளியே நீட்டிக்கிட்டிருந்தது"

முகத்தில் வியர்வை மழை. தடுமாறும் குரல்.

மனைவி பார்வதி நீட்டிய காகிதத்தை வாங்கினார் மணியம்.

மணியத்துக்கு இரண்டு மாதமாகவே தொடரும் பிரச்னைகள். அதிக லாபம் வரும் என்று பாத்திர வியாபாரத்தை உதறிவிட்டு துணிக்கடை வைத்ததில் ஏகப்பட்ட விரயம். கடன் கொடுத்தால் வியாபாரம் வளரும் என்ற மூட நம்பிக்கை. கடனாகத் தரும்போது ஓடிய வியாபாரம் வசூல் பண்ண ஆரம்பித்ததும் நொண்டியடித்து முடமாகி விட்டது. இப்போதைய நிலைக்கு ஐந்து லட்சம் அவசியத் தேவை. கடைக்கு மூன்று மாத வாடகை பாக்கி. ஊழியர்களுக்கு இரண்டு மாத சம்பளம் தர வேண்டும். வங்கி மேலாளர் கடன் தர அலைக்கழிக்கிறார். திடீர்த் தேக்கநிலை. என்ன செய்வது, எப்போது விடிவு காலம் வரும் என்ற கவலை.

இப்போது.... வினயாவைக் காணோம் என்ற திடீர் குழப்பம். கை நடுங்க, கடிதத்தைப் பிரித்தார்.

"அன்புள்ள அப்பா, அம்மாவுக்கு வினயாவின் இறுதி வணக்கங்கள். எனக்குப் பன்னிரண்டாம் வகுப்புப் பாடங்கள் எதுவும் புரியவில்லை. வகுப்பறையில் உட்காரவே அவமானமாக இருக்கிறது. கண்ணைக் கட்டி இருட்டறையில் தள்ளி விடப்பட்டவளாய்த் தத்தளிக்கிறேன். என் படிப்புக்காக நீங்கள் எவ்வளவோ செலவு செய்திருக்கிறீர்கள். ஆனால் 200க்கு 197 வாங்கியவர்களுக்கே பொறியியல் சீட் கிடைக்காது என்ற செய்திகள் வருகிறதே அப்பா. என் மனசு நடுங்குகிறது. நான் கட்டாயம் பரீட்சையில் தேற மாட்டேன். உங்களுக்கு மேலும் மனக்கஷ்டம்,



பணக்கஷ்டம் தர விரும்பவில்லை. மரணம்தான் என் முடிவு. மன்னித்து விடுங்கள்.

இப்படிக்கு
அன்புமகள் வினயா

"தோட்டத்துப்பக்கம் தேடினியா?" பதைபதைத்துக் கேட்டார்.

"இல்லீங்க" அழுதுகொண்டே பதில் சொன்னாள் பார்வதி.

சட்டையை மாட்டிக்கொண்டு பின் பக்க வேலிதாண்டி வேகமாக ஓடினார். மழைத் துளி காணாமல் வறண்ட கிணறு.

# "அழாதே வினயா!"



கைபபிடிச்சுவர் மீது வினயா.

அதிகாலைக் காற்று அவள் உடம்பை அழுகையால் உலுக்கிக்கொண்டிருந்தது.

"வினயா!"

ஓடிப்போய் மகளை இழுத்து அணைத்தார்.

"ஏம்மா, இப்படி ஒரு முட்டாள் தனமான காரியம் செய்யத் துணிஞ்சே? கேவலம் பாடம் புரியலை - படிப்பு வரலைன்கறதுக்காக செத்துப் போக நினைக்கலாமா? நீ வாழ வேண்டிய பெண். என்ன கஷ்டம் வந்தாலும் தைரியமா ஜெயிக்கணும்"

மகளின் தலையை அன்பாகத் தடவினார்.

"அப்பா, எனக்குப் படிப்பு வரல்லே. டீச்சர்ஸ் எல்லாம் திட்றாங்க. நான் என்ன பண்ணுவேன்?"

"அழாதே, கண்ணைத் துடைச்சுக்கோ. முதல்ல உனக்குள்ள தன்னம்பிக்கையை

வளர்த்துக்கோ. தைரியமா இரு. சில சமயம் நம்ம வாழ்க்கையிலே திடீர்னு வந்த பிரச்னையை எப்படிச் சமாளிக்கறதுன்னு பார்க்கணும்? தோல்விக்குப் பயந்தா வெற்றியை அனுபவிக்க முடியாது''

''என்னப்பா சொல்றீங்க?''

''உன்கிட்டே நீயே சில கேள்விகளைக் கேட்டுக்க. நான் புத்திசாலிப் பொண்ணு. தைரியசாலி, சாதிக்கப் பிறந்தவள். நான் முட்டாள் இல்லே; என் வகுப்பிலே இருக்கிற மற்ற பிள்ளைகளுக்கெல்லாம் சுலபமாக விளங்குகிற பாடங்கள் எனக்கு மட்டும் ஏன் விளங்கவில்லை? கொஞ்சம் பொறுமையா, துணிச்சலா எதையும் எப்படியும் தெரிஞ்சுக்குவேன்கற வெறியோடு படிக்க ஆரம்பி. எந்தப் பாடமும் சுலபமா விளங்கும். சாவைத் தேடறதுக்குப் பயன்படுத்தற துணிச்சலை கொஞ்சம் வாழறதுக்கும் செலவழிச்சா எவ்வளவு நல்லாயிருக்கும்? கண்ணைத் துடைச்சுக்க. இந்த வருடம் நிறைய மார்க் வாங்கி பாஸ் பண்ணப் போறே. உன்னை நானே அழைச்சுக்கிட்டுப் போய் நல்ல காலேஜ்ல சேர்க்கப் போறேன், இது சத்தியம்!''

மகளை வீட்டுக்குள் அழைத்துச் சென்றார்.

மகளுக்கு பார்வதி ஏதோ அட்வைஸ் செய்யும் சத்தம் வெளியே கேட்டது.

## புள்ளி விவரப் புலி!

2003 ஆம் ஆண்டு நடத்தப்பட்ட ஆய்வின்படி, ஒரிசா, ஜார்கண்ட், சட்டீஸ்கர், பீகார், மத்திய பிரதேசம் ஆகிய மாநிலங்களைச் சார்ந்த விவசாயக் குடும்பங்களின் மாதாந்திரச் சம்பளம் 225 ரூபாயை விட குறைவானதே. அதாவது நாளொன்றுக்கு எட்டு ரூபாய் மட்டுமே. விளைவு? 4.3 கோடி இந்திய விவசாயக் குடும்பங்கள் பெருங்கடனில் உள்ளன.



கழிப்பறைக்குள் நுழைந்தார் மணியம். சட்டைப் பையில் இருந்த காகிதத்தை எடுத்துப் படித்தார்.

''அன்புள்ள பார்வதி, வினயா... என் கடைசி ஆசிர்வாதங்கள்.

என் முப்பத்திரண்டு வருட உழைப்பும் வியாபாரத் திறனும் கடைசியில் பயனில்லாமல் போய்விட்டது. லட்சக்கணக்கில் கடன்தான் மிச்சம். எதிர்காலத்தின் மீது எனக்கே நம்பிக்கை இல்லை. உன்னையும் அன்புமகள் வினயாவையும் கண் கலங்காமல் காப்பாற்ற முடியுமா என்பதே கேள்விக் குறியாகிவிட்டது. மரணத்தால் மட்டுமே எனக்கு நிம்மதி தர முடியும். ஆகவே, நான் போகிறேன்.

இப்படிக்கு,
மணியம்.

கடிதத்தைக் கிழித்தார். கழிவு நீர்த் தொட்டியில் வீசினார்.

நம்பிக்கை பூத்த மனத்தோடு புதிய மணியம் வெளியே வந்தார். ○

# 39க்கு சலாம் போடும் 79!



• சி. மகேந்திரன்

நம்மூர் அரசியலே மிகப்பெரிய காமெடிதான். இருந்தாலும் அந்த அரசியல்வாதிகளுக்கும் நகைச்சுவை உணர்வு இருக்கும்தானே? சில அரசியல் வி.ஐ.பி. களிடம் அவர்கள் மிகவும் ரசித்த அரசியல் காமெடி ஒன்றைச் சொல்லச் சொன்னோம்.

## ராஜாவின் அ.தி.மு.க. ஜோக்!

ஒரு வீட்ல நிச்சயதார்த்தம் நடந்துதாம். அங்க மாப்பிள்ளை - பொண்ணு வீட்டு ஆளுங்க மட்டும்தான் இருந்திருக்காங்க. திடீர்னு கரண்ட் கட் ஆகியிருக்கு. கரண்ட் திரும்ப வந்தப்போ பார்த்தா தாம்பூலத் தட்டுல இருந்த ஆயிரம் ரூபா பணம் காணாமப் போயிடுச்சாம். 'சரி.. எல்லாரையும் செக் பண்ணிடலாம்'னு ஒருத்தர் சொல்ல, இன்னொருத்தரு 'அதெல்லாம் வேண்டாம். நம்ம எல்லாருமே சொந்தந்தான். அதனால திருடுன ஆளுக்கு ஒரு வாய்ப்புத் தந்து ஸ்விட்ச்சை, ஒரு நிமிஷம் நிறுத்திடுவோம். திரும்ப ஆன் பண்றதுக்குள்ள பணத்தைத் திரும்ப வச்சிடட்டும்'னு சொன்னாராம். அதே போல செய்துட்டு ஸ்விட்சை ஆன் பண்ணினா வீட்ல இருந்த ரெண்டு வெள்ளிக் குத்து விளக்கையும் தூக்கிகிட்டு ஆளு எஸ்கேப் ஆயிட்டானாம். அது மாதிரிதான் அ.தி.மு.க. வுக்கு இன்னொரு தடவை ஆட்சி பண்ண வாய்ப்புத் தர்றது.

## ராதாரவியின் தி.மு.க. ஜோக்

தமிழ்நாட்டுல தி.மு.கன்னு ஒரு கட்சி இருக்கறதை விட புதுசா காமெடி வேணுமா சொல்லுங்க. சரி, சொல்லிட்டாப் போச்சு. சமீபத்துல நட்வர்சிங் மேல ஒரு ஊழல் குற்றச்சாட்டு வந்துச்சு. எல்லாரும் அவரை ராஜினாமா பண்ணச் சொன்னாங்க. ஆனா கருணாநிதிக்கு மூக்குக்கு மேல கோபம் வந்துடுச்சு. ஆச்.. பூச் கன்னாரு. கடைசில பார்த்தா அவங்க கட்சியே நட்வர்சிங்கை மந்திரி பதவியில இருந்து தூக்கி கடாசிடுச்சு. இவருக்கு ஏண்டா இந்த மேட்டர்ல மூக்கை நுழைச்சோம்னு ஆயிடுச்சு. எனக்குத் தெரிஞ்ச சமீபத்துல நடந்ததுலயே இதுதான் டாப் டக்கர் காமெடிப்பா...

## சி.மகேந்திரனின் ஜெனரல் ஜோக்!

பதினைஞ்சு வருஷத்துக்கு முன்னால

• ராஜா



• ராதாரவி





* வசந்தகுமார்

ஒரு தலைவருக்கு நூற்றாண்டு விழா நடந்தது. வழக்கமா அந்த மாதிரி விழாவுல அமைச்சர் ஒருத்தர் கலந்துகிட்டு அந்தத் தலைவரைப் பத்தி ஆஹா... ஓஹோ...ன்னு புகழ்ந்து பேசறது மரபு. அப்படி ஒரு தமிழக அமைச்சர் ஒருத்தரு பேச ஆரம்பிச்சு திடுதிப்புன்னு கும்பகோணத்தில் பிறந்த அந்தத் தலைவர்னு சொன்னாரு பாருங்க... கூட்டத்துல ஒரே சலசலப்பா ஆயிடுச்சு. விஷயம் என்னன்னா நூற்றாண்டு விழா நடந்தது வ.வே.சு. ஐயர் என்பவருக்கு. ஆனா நம்ம அமைச்சர் பேசுனது உ.வே.சா. பற்றி.. எப்படி இருக்கும் கூட்டத்துக்கு வந்தவங்களுக்கு. இந்த காமெடில மிகப் பெரிய டிராஜிடியே இருக்கு. நம்ம அமைச்சர்களோட பொது அறிவும், அதிகாரிகளோட பொது அறிவும் எந்த அளவுக்குக் கீழே போயிடுச்சு பாருங்க..

## வசந்தகுமாரின் பி.ஜே.பி. ஜோக்!

**நா**ன் ரொம்ப ரசிச்சு ரசிச்சு சிரிச்ச காமெடின்னா, அது சமீபத்துல பி.ஜே.பி. அடிச்ச காமெடிதான். அதாங்க... தமிழ் நாட்டுல எத்தனை தொகுதிங்க. அது அத்தனைக்கும் வேட்பாளருங்க, கையெழுத்துப் போடறதுக்கு ஆளுங்க, மாற்று வேட்பாளரு... இவ்வளவு சமாசாரம் எலக்ஷன்ல இருக்குன்னு தெரிஞ்சுருந்தும் எல்லா இடத்துலயும் தனிச்சு நிக்கப் போறோம்னு அறிவிச்சாங்க பாருங்க. அடேயப்பா.. அதைவிட காமெடி ஒண்ணு இருக்குமா என்ன. ஆனா அதைவிட இன்னொரு சூப்பர் காமெடி ஒண்ணு சொல்லட்டுமா... இங்க ஒரு கட்சி இருக்கு. அதனோட தலைவருக்கு வயசு 39. ஆனா 79 வயசுக்காரரு தோள்ல கிடக்குற துண்டை எடுத்து இடுப்புல கட்டிக்கிட்டு ஐயான்னு கையெடுத்து கும்பிடற ஒரு ஏ க்ளாஸ் காமெடி ஒண்ணு இங்க நடந்துட்டு இருக்கு. இன்னொரு காமெடி சொல்லட்டுமா, இன்னைக்கு தமிழ்நாட்டுல போலீஸ்காரங்க யாரையுமே கேள்வி கேட்க முடியல தெரியுமா. ஏன்னா நீ ஒரிஜினல் போலீஸா, இல்ல டூப்ளிகேட் போலீஸான்னு கேட்கற நிலைமைதான் இன்னிக்கு. இப்படி நிறைய சொல்லிக்கிட்டே போகலாம். அப்புறம் இதுவே காமெடியா போயிடும். அதனால இத்தோட முடிச்சுக்கிடுவோம்.

**- பொலிட்டிகல் பொன்னப்பா**

படங்கள் : **ஸ்ரீஹரி**

"இதென்ன... கச்சேரிக்கு நடுவே மெகா சீரியலும் ஓடுது..."

"லேடீஸ்ங்க, மெகா சீரியலையும் மிஸ் பண்ணக்கூடாது இல்லே...?"

- ஜெ மாணிக்கவாசகம்





• 'தவமாய்த் தவமிருந்து...' படத்திலிருந்து

## சொந்தங்கள் வாழ்க! 11

# அந்த இன்பமே தனி!

ஏதோ ஒரு கட்டாயத்தின் பெயரில் முதியோர் இல்லங்களுக்குப் பெற்றோரைத் தள்ளும் குழந்தைகளின் மனநிலை, பலகாலம் தனித்து வாழ்ந்துவிட்டு, சில தவிர்க்க முடியாத சூழ்நிலைகளால் தங்களுடன் பெற்றோர் வந்து வாழும் போது இக்கட்டுகளை எதிர்நோக்கும் குழந்தைகளின் மனநிலை இவற்றைப் பற்றி மட்டும் கூற விரும்புகிறேன்.

● அப்பா இறந்தவுடன், அவர் ஈமக்கிரியைகளை முடித்த குழந்தைகள், அம்மா வரலட்சுமியை சிறிய ஊரில் தனித்துவிட விருப்பமின்றி தங்களுடன் அழைத்துப் போனார்கள். தான் வாழ்ந்த வீட்டை இரு மகன்களும், இரு மகள்களும் விற்றுவிட நச்சரித்ததை அவரால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. 'பழங்காலத்து வீடு'; நாம் இனி போய் இருக்க முடியுமா? தண்டத்துக்கு ஏன்? விற்றாலாவது, இந்தப் பணத்தை அவரவர் நகரங்களில் கட்டும் வீட்டுக்கு உபயோகப்படுத்தலாம்' இது பிள்ளைகள் வாதம். உழைத்து, உழைத்து.

மனநல ஆலோசகர்
**பிருந்தா ஜெயராமன்**





"ஐந்து நிமிஷம் தாமதமாக வந்திருந்தால்கூட கச்சேரிக்கு டிக்கெட் கிடைச்சிருக்காது"

குருவி போல சிறுகச் சிறுகப் பணம் சேமித்து, ஆபீஸில் லோன் வாங்கி, தன் கணவன் கட்டிய வீட்டை, பிள்ளைகள் மட்டமாகப் பேசி, தனது விருப்பத்தைக் கூட தெரிந்துகொள்ளாமல், விற்க ஏற்பாடு செய்ததில் வரலட்சுமிக்கு நெஞ்சு வலித்தது. அதில் விழுந்தவர்தான்; மீளவில்லை. இறந்த தாய் தன் வருத்தத்தைத் தனது சுலோகப் புத்தகத்தில் எழுதி வைத்திருந்தது பிற்பாடு தெரிய வந்தபோது, பிள்ளைகள் துடித்துப் போயினர். இனி எங்கு போய் தாயிடம் மன்னிப்புக் கேட்பது?

● குடும்பத்தை ஆளாக்கி, தெம்பாக நிமிர்ந்த தம்பதிகள், ராமனாதன் - விமலா. தன் வீடு, தன் வேலைகள் என்று சுதந்திரமாக இருந்துகொண்டு, விடுமுறை நாட்களில் பேரப்பிள்ளைகள் வந்துபோக சுய ஆட்சியில் மகிழ்வோடு வாழ்ந்தார்கள்! ராமனாதனுக்கு உடல் நலிவு ஏற்பட, இனி தனித்து வாழ முடியாத நிலையில், அவர்கள் மூத்த மகனுடன் போய் இருக்க வேண்டியதாயிற்று. சுமுகமாக இருந்த உறவு, கொஞ்சம் கொஞ்சமாகச் சுமையாக ஆரம்பித்தது. வாழ்க்கைமுறை, பழக்கங்கள் எல்லாமே மாறுபட பிரச்னைகள் கிளம்பின! இரண்டு பிள்ளைகள் இருந்தாலும், ராமனாதன் உடல் நிலை காரணமாக ஒருவருடைய வீட்டிலேயே வாழ வேண்டி இருந்ததால் மூத்த மருமகள் வெளிப்படையாகக் குறைப்பட்டுக் கொள்ள, இளையவனுடன் அவன் உறவு கசப்பானது!

ஒருசமயம், ஒரு கூட்டத்தில், 'உறவுகள். சுவையா, சுமையா?' என்கிற தலைப்பில் நான் பேசி முடித்தவுடன், ஒரு நடுத்தர வயதினர் என்னிடம் கேட்டார். "என் குடும்பத்தில், என் பெற்றோருக்கு நான்கு மகன்கள் இருந்தும், வேறு ஒருவரிடமும் சரிபட்டு வராததால் அவர்கள் எங்களிடமே தங்கிவிட்டார்கள். மற்றவர்களும் பொறுப்புவிட்டது என்று ஒதுங்கிவிட்டார்கள்" இதனால் தன் குடும்பத்துக்கு ஏற்படும் இடையூறுகளை அடுக்கிக்கொண்டே போனார். மிகவும் மனம் நொந்து பேசிய அவரிடம், "அவர்களைப் போல் நீங்களும் என்னால் முடியவில்லை என்று ஒதுங்கிவிடலாமே?" என்று நான் கேட்டதும், 'ஒரு மனநல ஆலோசகரிடம் தீர்வு கேட்டால், இந்தம்மா என்ன இப்படிப் பதில் சொல்றாங்க?' என்கிற முகபாவத்துடன்) அவர் விதிர்த்துப்போனார், "அதெப்படி என்னைப் பெற்றவர்களைப் பாதுகாக்க வேண்டியது என் கடமையல்லவா?" அவர் அளித்த பதிலிலேயே அவர் கேள்விக்கு விடை இருந்தது! ஆம், கடமையைச் செய்யாவிட்டால் மனசாட்சி உறுத்துமே!

ஒரே கட்டடத்தில் வேலை செய்யும் மூவரிடமும், 'நீ என்ன செய்துகொண்டிருக்கிறாய்?' என்ற கேள்வி கேட்கப்பட்டபொழுது, ஒருவர், 'தெரியலே? கட்டடவேலை செய்யறேன்!' என்று அலுத்துக்கொண்டாராம். அடுத்தவர், 'ஏதோ ஒரு பொழப்புன்னு விடுவியா... கேக்க வந்திட்டியே!' என்று எரிந்து விழுந்தாராம். மூன்றாமவர், 'ஒரு பெரிய மகானுக்கு நினைவாலயம் கட்டறாங்களாம்; அதுலே என் சின்ன பங்கைச் செய்யறேன்னு வைச்சுக்கயேன்' என்றாராம். இதில் செய்வதை அலுப்பில்லாமல் யார் செய்கிறார் என்று சொல்லத் தேவையில்லை அல்லவா?

செய்யும் செயல்களில் வருத்தமும் கோபமும் பளுவும் கூடுவது அலுப்பைத் தரும். 'நான் ஏன் இதைச் செய்ய வேண்டும்?' என்பதற்குப் பதில், 'நான் ஒரு



"போஸ்டரைப் பார்த்து மலைச்சுப் போயிட்டீங்களா... எதுக்கு?"



"வண்டியைக் கொஞ்சம் மெதுவா ஓட்டிக்கிட்டுப் போன்னு சொன்னதைத்தான் அந்த கடன்கார டிரைவர் கேட்கலையே!"

- ஞா. ஞானமுத்து

நல்ல செயலைச் செய்யும் நிறைவு இருக்கிறது! என்று நினைக்க ஆரம்பித்தால்? கிடைக்கும் இன்பமே தனி!

● முதிர்ந்த வயதில் பிள்ளைகளுடன் வாழும் பெற்றோர், பெரிதாக எதையும் எதிர்பார்ப்பதில்லை; 'அப்பா தூங்கினீங்களா?', 'அம்மா, கொஞ்ச நேரம் ரெஸ்ட் எடுங்களேன்!' போன்ற கனிவான சில வார்த்தைகள். இதைச் சொல்ல முடியாமல் அப்படி என்ன ஓட்டமோ தினசரி வாழ்க்கையில்?

● 'உங்களுக்குச் சின்னவன்/வள் தான் உசத்தி; எனக்கு என்ன செய்து கிழிச்சீங்க?' போன்ற கடுமையான வார்த்தைகளால் அவர்களைப் புண்படுத்திப் பார்க்கலாம்; பலன் எதுவும் இல்லை.

குழந்தைகள் சின்னவர்களாக இருக்கையில், பெற்றோர் தங்களுக்குத் தெரிந்த விதத்தில் வளர்க்கிறார்கள்; அறியாமையின் காரணமாக, குழந்தைகளுக்குத் தேவையான தன்னம்பிக்கையையோ, தைரியத்தையோ கொடுக்கத் தவறி இருக்கலாம். தெரியாது செய்த தவறுகளுக்காக, ஆளானபின் பெற்றோரைப் பழி வாங்குவதால் என்ன லாபம்? தான், தனது என்கிற சுயநல வட்டத்தில் இன்றைய குழந்தைகள் மாட்டிக் கொள்வதால்தான், பெற்றோருடைய மெல்லிய உணர்வுகள் புரிவதில்லையோ?

பெரும்பாலான குழந்தைகள், பெற்றோரை ஒதுக்க நினைப்பதில்லை; ஒதுக்கினாலும், அது குறித்து மகிழ்ச்சியடைவதில்லை. பல வகையில் பிரச்னைகள் மிரட்ட, அவர்கள் சீக்கிரம் களைத்து விடுகிறார்கள். அப்போது கூடுதல் சுமையாக வீட்டு பிரச்னைகள் உருவெடுக்கும்போது, தாங்க முடிவதில்லை. யாருமே அதிக உரிமை எடுத்துக்கொள்வது எங்கே? பெற்றோரிடம்தான்! அப்பாதானே, அம்மாதானே என்கிற மெத்தனமான போக்கு. இன்று கடுமையாகப் பேசிவிட்டு, நாளை சமாதானக் கொடி காட்டிவிடலாம் என்கிற உத்தி பெற்றோரிடம் வேண்டாமே! நாளை அவர்கள் இல்லாமல் போய்விட்டால்?

'அழகான வீட்டுக்குள் உடைந்த குடும்பம்' - இப்படியா வாழ்வது? பெற்றோர் - பிள்ளைகள் உறவில் உள்ள உரிமையின் காரணமாக, இரு தரப்பினருமே வரம்பு மீற வாய்ப்புண்டு! சொந்தங்களின் முக்கியத்துவத்தை இளம் பருவத்திலேயே பெற்றோர் காட்டிக் கொடுக்க வேண்டும். சரியான முன்னுதாரணங்களாக அவர்கள் நடந்துகொள்ள வேண்டும். பிள்ளைகளும் வளர்ந்தபின் பெற்றோருடைய தேவை உணர்ந்து செயல்பட்டால் நிறைவைத் தரும்; வாழ்வின் மாலை நேரம் அவர்களுக்கு நிம்மதியாகக் கழியும்.

அவையில் முந்தியிருப்பச் செய்யுமாறு எல்லாத் தந்தைகளும் 'தவமாய்த் தவமிருந்து' ராஜ்கிரண் மாதிரி தன்னைச் செருப்பாக்கிக் கொண்டு தேயலாம். ஆனால் அவர்களுடைய ரத்தத்தின் ஒரு பிண்டமாக உருவாக்கிய மகன்/மகள், 'என்னைக் கேட்டுக்கிட்டா என்னைப் பெத்தீங்க? செய்ய வேண்டியது உங்க கடமைதானே?' என்று சாட்டையால் அடிப்பது போல் கேட்டுவிட்டால்? அவர்களை நடைபிணமாக்க அந்த வார்த்தை ஒன்றே போதும்! இந்த அவல நிலைக்குத் தன்னையும் தன் குடும்பத்தையும் ஆளாக்காமல் இருப்பது, பெற்றோரின் பொறுப்பல்ல; குழந்தைகளின் கடமை. இல்லையென்றால், "தாத்தாவுக்குச் சாப்பாடு வெச்ச கொப்பரையைக் கொடுப்பா; நாளைக்கு உனக்கு நான் வைக்க வேண்டாமா?" என்று சொல்கிற மகனை/மகளைத் தயார் செய்து விடுவோம்!

'தன் வினை தன்னைச் சுடும்'

(தொடரும்)

"பாராளுமன்றத்தில் கேட்கப்படும் ஒவ்வொரு கேள்விக்கும் மதிப்பு உள்ளதை உலகுக்கு உணர்த்திய உத்தமரே, வாழ்கன்னு போட்டிருக்காங்களே!"

- ச. தமிழ்ச்செல்வி



# புது உலகம் பார்க்கணுமா?

சுனந்தாஜி



தலைமுறை தலைமுறையாகக் குகைக்குள்ளே வசித்துவந்த மனித இனம் ஒன்றில், இளைஞன் ஒருவனின் மனத்தில் இந்த இடத்துக்கு அப்பால் என்ன இருக்கும்? என்று தெரிந்து கொள்ளும் ஆர்வம் ஏற்பட்டது. அந்தக் கேள்வியை தன் இன முதியோர்களிடம் கேட்டபோது, அவனுக்குச் சரியான பதில் கிடைக்கவில்லை என்பது மட்டுமில்லை அவன் கேள்வி கேட்டதே தவறு என்று சொன்னார்கள்.

விடை தேடும் ஆர்வம் குடைந்தெடுக்க, இளைஞன், குகையை விட்டு நடக்கத் தொடங்கினான். இருட்டில் தட்டுத் தடுமாறி நடந்தபோது, சில இடங்களில் விழுந்து எழ வேண்டி இருந்தது. சிராய்ப்புகள் ஏற்பட்டன.

இளைஞன் நடந்துகொண்டே இருந்தான். முன்னால் பார்த்தால், குகையின் நுழைவாயில் தெரியாதபடி ஒரே இருட்டு. பின்னால் திரும்பினால், தன் இனமக்கள் வாழ்கிற சுவடே தெரியாதபடி இருட்டு.

இளைஞனின் மனத்தில் சற்று பயம். இலேசான நடுக்கம். திரும்பிப் போய்விடலாமா? என்ற எண்ணம் தலைதூக்கியது.

* படம் : ஸ்ரீஹரி



'சே! வேண்டாம்! இந்த இடத்துக்கு அப்பால் என்ன இருக்கிறது என்று தெரிந்துகொண்டே ஆக வேண்டும். அதற்கு எத்தனை இடர்ப்பாடுகள் வந்தாலும் சரி. மனம் தளர்ந்துவிடக் கூடாது. ம்... முன்னே செல்! நிச்சயம் உன் கேள்விக்கு விடை கிடைக்கும்' என்று ஊக்கம் ஊட்டி, தட்டிக் கொடுத்தது அந்த இளைஞனின் மனம்.

மீண்டும் நடக்க ஆரம்பித்தான். இப்போது இருட்டு அவனது கண்களுக்குப் பழகிவிட்டது. தட்டுத்தடுமாறவில்லை. நடந்துகொண்டே இருந்தான்.

சட்டென்று, தொலைவில் சிறிது வெளிச்சம் தென்பட்டது. இன்னும் வேகமாக நடந்தான். நடக்க, நடக்க, பல்வேறுவிதமான ஒலிகளைக் கேட்கத் தொடங்கினான்.



அவனது நடையில் வேகம் கூடியது.

அப்பாடா! இளைஞன் குகையை விட்டு வெளியில் வந்துவிட்டான். அது ஒரு பிரம்மாண்டமான காட்டுப் பகுதி. ஓடும் ஆறு. வண்ணப் பூக்கள். பல்வேறு ஒலிகள் வாழ்க்கையில் இதுவரை கண்டிராத ஒரு உலகத்தைப் பார்த்தான். இயற்கையை ரசித்தான். ஓடும் நீரை அள்ளிப் பருகினான். பழங்களைப் பறித்துச் சாப்பிட்டான். ஓடி ஆடினான். இனம் புரியாத சந்தோஷம் அவனுக்குள் ஏற்பட்டது.

தான் பிறந்து, வளர்ந்த குகை, தன் இனமக்கள் எல்லாம் அவனது நினைவுகளிலிருந்து மறைந்தன. புதிய மனிதன் போல உணர்ந்தான். புது சூழ்நிலை அவனை மிகவும் கவர்ந்தது. தன்னையே மறந்தான். ஒரு வாரம் ஓடிவிட்டது.

திடீரென்று குகை மக்களைப் பற்றிய நினைவு வந்தது. 'ஓ! என் இன மக்கள் அங்கே எப்படி ஒரு வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம், குகைக்கு வெளியே இருக்கும் உலகத்தைப் பற்றி எடுத்துச் சொல்லி, வெளியில் அழைத்துக்கொண்டு வர வேண்டும். அது என் கடமை' என்று நினைத்தான். உடனே குகைக்குள் நடக்க ஆரம்பித்தான்.

அதே இருட்டு அதே

வெற்றி உங்கள் சாய்ஸ்!

22

இடர்ப்பாடுகள். ஆனால் இளைஞனின் மனத்தில், இந்தப் பயணம் எங்கே போய் முடியும் என்பது குறித்த தெளிவு இருந்த தால், சிரமமாகத் தெரியவில்லை. சீக்கிர மாகவே தன் இன மக்களைச் சந்தித்தான்.

"ஓ! திடீரென்று காணாமல் போன வன் வந்துவிட்டானோ?" என்று நக்க லாய்க் கேட்டார்கள் பெரியவர்கள்.

அனைவரையும் கூட்டிவைத்து, குகைக்கு வெளியில் இருக்கும் உலகம் குறித்து விளக்கிச் சொன்னான்.

"இவனுக்குப் பைத்தியம் பிடித்துக் கொண்டிருக்கிறது. அதனால்தான், கற் பனையாக ஏதேதோ உளறுகிறான்" என்றனர்.

"குகைக்கு வெளியில் சூரியன், சந் திரன், மலை, காடு, ஆறு, பகல், இரவு, பூக்கள், பழங்கள், இயற்கையின் இன்னும் ஏராளமான அம்சங்கள் இருக்கின்றன. அவை தரும் மகிழ்ச்சியை மறுத்துவிட்டு, நாம் ஏன் இந்த இருட்டுக் குகையில் வாழ வேண்டும்?" என்ற அவனது பேச்சு அவர்கள் காதில் விழவில்லை.

ஆனால், இளைஞன் தனது முயற்சி யைக் கைவிடத் தயாராக இல்லை. தின மும் புற உலக வாழ்க்கை குறித்துப் பேசி னான். ஆனால் மக்கள் அவனை மதிக்க வில்லை.

ஒரு நாள் இரவு, ஆழ்ந்த சிந்தனையில் அமர்ந்திருந்த அந்த இளைஞன் முன், இன்னொரு இளைஞன் வந்து நின்றான். "வா! எனக்கு அந்த புது உலகைக் காட்டு!" என்றான். இளைஞன் முகத்தில் பிரகாசம்.

இளைஞர்கள் இருவரும் கை கோத்துக் கொண்டு வெளி உலகை நோக்கி நடக்க



ஆரம்பித்தனர்.

முதல் இளைஞன் உற்சாகமாய் நடந் தான். காரணம், இடையில் சந்திக்கும் பிரச்னைகள் எல்லாம் தற்காலிக மானவை குகைக்கு வெளியே வெளிச்சம் இருக்கிறது என்று அவன் நன்றாக உணர்ந் தவனாயிற்றே. ஆனால், இவன், முதல் தடவை சென்றபோது என்ன மனநிலை யில் இருந்தானோ, அதே மனநிலையுடன் இரண்டாவது இளைஞன் இப்போது நடந்து கொண்டிருந்தான்.

'முன்னும், பின்னும் இருட்டு. வெளிச் சம் கண்களில் தென்படவே இல்லையே. இந்த இளைஞன் சொன்னதை நம்பி, இவ னுடன் புறப்பட்டு வந்தது தவறா? பெரியவர்கள் சொன்னாற்போல இவன் ஒரு பைத்தியமோ? இவனை நம்பி புறப் பட்டுவிட்டோமே!' என்கிற ரீதியில் அவனது மன ஓட்டம் இருந்தது.

இதனைப் புரிந்துகொண்டு முதல் இளைஞன் தன் ஜூனியருக்கு ஊக்கமூட் டும்படியாய் பேசிக்கொண்டே வந்தான்.

இரண்டுபேரும் குகைக்கு வெளியில் வந்தனர். புது உலகைக் கண்டு பிரமித்துப் போனான் ஜூனியர். சில நாட்கள் அனைத்தையும் அனுபவித்தான்.

முதல் இளைஞன், உடன் வந்தவனைப்



''நம்ம நடிகை தில்ஸ்ரீ இப்படிச் சொல்லியிருக்கக் கூடாது..''

''எதனால்..?''

''வருமான வரித் துறையினர் ரெய்டு நடத்தி, சிக்கின பணத்தை ஏன் கணக்குல காட்டலேன்னு கேட்டதுக்கு ஸ்கூல் டேஸ்லயிருந்து எனக்கு கணக்கு வராதுன்னாங்களாம்..''

- பிரசன்னகுமார்




பார்த்துச் சொன்னான். "நண்பா! என் கடமை வெற்றிகரமாய் முடிந்து விட்டது. நான் உனக்கு வழிகாட்டிவிட்டேன். இப்போது உன் முறை. நீ மறுபடி குகைக்குள்ளே செல். மக்களிடம் பேசு. ஒரு இளைஞனையாவது குகைக்கு வெளியில் அழைத்துக்கொண்டு வா!'' வாழ்த்துச் சொல்லி, குகைக்குள் அனுப்பி வைத்தான்.

இப்படித்தான் நம் நாட்டிலும் குரு, சிஷ்யன் பரம்பரை உருவானது.

சாமானிய மக்கள், குகைக்குள் வாழும் மக்களைப் போல இருக்கிறார்கள். ஆனால் ஒரே வித்தியாசம். இவர்கள் குகைக்கு வெளியில், இந்தப் பூமியில் வாழ்கிறார்கள். அற்ப விஷயங்களுக்கு சந்தோஷப்படுவதும், அர்த்தமற்ற விஷயங்களுக்காகத் துக்கப்படுவதும் இவர்கள் உடம்பில் ஊறிவிட்டது.

வெளிகை ரீதியான இந்த உலக வாழ்க்கைக்குள்ளேயே உழன்று கொண்டிருப்பதால், இதற்கு அப்பாலும் ஏதாவது இருக்கக்கூடும் என்கிற எண்ணமே இவர்களுக்கு ஏற்படுவதில்லை. பலருக்கு, இந்த உலகில், இதைவிட மேம்பட்டதாக எதுவும் இருக்க முடியாது என்கிற எண்ணம் கூட உண்டு.

ஞானிகள், தாங்கள் கண்டு உணர்ந்த வாழ்க்கையின் உண்மைகளை, சாமானிய மக்களுக்கு வழங்கத் தயாராக இருக்கிறார்கள். ஆனால் அதனை ஏற்றுக் கொள்ளக் கூடிய மனப்பக்குவம் மக்களுக்கு இல்லை. கேள்விகளை எழுப்பி விடை தேட ஆரம்பித்துவிட்டால், தெளிவு பிறந்துவிடும்.

வாழ்க்கையை மேம்படுத்தும், உண்மைகளைப் புரியவைக்கும் விஷயங்களை எடுத்துச் சொல்லும் ஞானிகளை, இந்த உலகம் பல தருணங்களில் கேலி பேசியதுண்டு. ஆனால் அந்த ஞானியினால் தெளிவு பெற்ற மனிதர்களும் உண்டு.

மருத்துவ உலகில், உலகளாவிய ஒரு மரபு கடைபிடிக்கப்படுகிறது. அறுவைச் சிகிச்சை நிபுணர்கள், தனது நெருங்கிய குடும்ப உறுப்பினர்களுக்கு அறுவைச் சிகிச்சை செய்ய மாட்டார்கள்.

முன் பின் தெரியாதவர்களுக்கெல்லாம் வெற்றிகரமாக ஆபரேஷன் செய்து முடிக்கும் ஒரு அனுபவம் மிகுந்த சர்ஜனால் தன் சொந்த மனைவிக்கு ஆபரேஷன் என்றால் ஏன் செய்ய முடியாமல் போகிறது.

வேறு ஒரு சர்ஜனை நம்பி ஆபரேஷனை ஒப்படைக்க முன் வருபவரால், ஏன் தானே அந்த ஆபரேஷனைச் செய்ய முடியாமல் போகிறது?

*ஏன்? ஏன்? ஏன்?*



**(அடுத்த இதழில் நிறையும்)**

# குத்துப்படங்களால் கொத்துப்பட்டோர் சங்கம்!



இன்னைக்கு தியேட்டர்ல போயி படம் பார்க்கப் போனா கையில ஒரு சாக்கு மூட்டையைக் கொண்டு போயி ஸ்க்ரீன்ல இருந்து சிந்துற சிதறுற மசாலாக்களை அள்ளிட்டு வந்து தனியா ஒரு மசாலாப் பொடி கம்பெனியே வைக்கலாம். அந்த அளவுக்கு, தமிழ் சினிமாவுல மசாலாத்தனம் மாங்கு மாங்குன்னு ஆடுது. இந்த மாதிரி மசாலாப் படங்களைப் பார்க்கறதுக்கு என்னென்ன முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுக்கலாம். படம் பார்த்துட்டு வந்து என்னென்ன சமூக அக்கறையுள்ள நடவடிக்கைகள் எடுக்கலாம்னு சில யோசனைகள்...



* படத்துக்கு போறப்ப கூடவே ஒரு இ.என்.டி. டாக்டரையும் கூட்டிட்டுப் போகலாம். நம்ம காதுல இருந்து இரத்தம் வர்றப்போ உடனே சிகிச்சை கொடுத்துடுவாரே! (அவரோட காதுக்கு நாம கேரண்டி தர முடியாது)

* இதயம் பலவீனமா உள்ளவங்க இப்படிப்பட்ட படங்களுக்குப் போறதுக்கு முன்னாடி உயில் எழுதி வைச்சுட்டுப் போறது உத்தமம்.

* படத்துக்கு உங்க அம்மாவையோ தங்கச்சியையோ கூட்டிக்கிட்டுப் போனா கூடவே ஒரு குடம் பாலையும் கொண்டு போங்க. ஏன்னா, சென்டிமென்ட் சீன்ல கண்டிப்பா ஹீரோ அம்மாவுக்கோ, தங்கச்சிக்கோ ஏதாவது அபிஷேகம் பண்ணுவாரு. நீங்களும் அதே சென்டிமென்டோட தியேட்டர்லயே அம்மாவுக்கும் தங்கச்சிக்கும் கண்ணீரோட பாலபிஷேகம் பண்ணீங்கன்னா, நீங்க எவ்வளவு பெரிய பொறுக்கியா இருந்தாலும், குடும்பப் பையன்னு



ஒத்துக்குவாங்க.

• இந்த மாதிரி மசாலா படத்துக்குப் போறதுக்கு முன்னாடி லைஃப் இன்ஷ்யூரன்ஸ் எடுத்துக்கறது நல்லது. குறைந்த பட்சம் நம்ம காதுகளையாவது இன்ஷ்யூர் பண்ணிட்டா பின்னணி இசையில கேப் விடாம முழங்குற தாரை தப்பட்டை மோளம் இசைக்கு நம்ம காதுகளைத் தியாகம் செய்யறதுக்கு அர்த்தம் இருக்கும்.

• படம் முடிஞ்சு, கண்டிப்பா பேய் அறைஞ்சாப்ல, துரத்தித் துரத்தி நாய் கடிச்சாப்லதான் வெளிய வருவீங்க. அதே (அலங்)கோலத்துல தியேட்டர்





வாசல்ல ஒரு மணி நேரம் நின்னீங்கன்னாப் போதும். அடுத்த காட்சிக்குப் போக நினைக்குற சிலர் உங்க பரிதாப நிலையைப் பார்த்து, மனசு மாறி படம் பார்க்காம எஸ்கேப் ஆக குறைந்த பட்ச வாய்ப்புகள் இருக்கு.

• இந்த மாதிரித் தொடர்ந்து ஒரு ஏழெட்டு படத்துக்குப் போய் நோட்ஸ் எடுத்துக்கிட்டாப் போதும். நீங்களே சொந்தமா 'தற்கால தமிழ் கெட்ட வார்த்தை அகராதி'ன்னு ஒரு புக் ரிலீஸ் பண்ணலாம்.

• இந்தப் படங்கள் ஓடுற ஒவ்வொரு தியேட்டர்லயும் ஒரு இரத்த வங்கி அமைக்கலாம். ஏன்னா ஸ்கிரீன்லதான் எல்லா குரூப் ரத்தமும் சிந்துதே, சிதறுதே!

• இந்த மாதிரி படங்கள் பார்த்து பாதிக்கப்பட்டவங்க எல்லோரும் சேர்ந்து 'குத்துப் படங்களால் கொத்துப்பட்டோர் சங்கம்'னு தொடங்கலாம். இதன் மூலமா மக்கள் அறியாமையால் இந்தப் படங்கள் ஓடுற தியேட்டருக்குப் போறதைத் தவிர்க்க விழிப்புணர்ச்சி ஏற்படுத்தலாம்.

கற்பனை : **பரோட்டா மாஸ்டர்**



# நீல ட்ராகனும் அதிசய புத்தகமும்!

ஹிரோநோபு சகாகுச்சி. ஜப்பானிய குழந்தைகள் தூங்க முடியாமல், படிக்க முடியாமல், ஹோம் வொர்க் செய்ய முடியாமல் திண்டாடுவதற்கு இவர்தான் முழுமுதல் காரணம். ஃபைனல் ஃபாண்டஸி நினைவிருக்கிறதா? உலகப்புகழ் பெற்ற இந்த கம்ப்யூட்டர் விளையாட்டை உருவாக்கியவர் சாட்சாத் சகாகுச்சிதான். 1987இல் வெளியான ஃபைனல் ஃபாண்டஸி கிட்டத்தட்ட ஒரு குட்டி புரட்சியை ஏற்படுத்தியது. பாவம் குழந்தைகள். அன்று தூக்கத்தைத் தொலைத்தவர்கள்தான் இன்னமும் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். இதுவரை மொத்தம் 60 மில்லியன் விளையாட்டு சி.டிகள் விற்றுத் தீர்ந்துவிட்டன. அதாவது 60 மில்லியன் குழந்தைகள் இரவு முழுவதும் கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஃபைனல் ஃபாண்டஸி ஒரு விளையாட்டு என்று குழந்தைகளிடம் சொன்னால் விழுந்து விழுந்து சிரிப்பார்கள். அது ஒரு உலகம். குட்டிக் குழந்தைகள், சற்று வளர்ந்த கல்லூரிக் குழந்தைகள், தலைமுடி கொட்டி பற்கள் தொலைத்த ரிட்டயர்ட் குழந்தைகள் அனைவருக்கும் இங்கு இடமுண்டு. சி.டியை உள்ளே தள்ளிவிட்டு காலை நீட்டி உட்கார்ந்துவிட்டால் அடுத்த 40 மணி நேரத்துக்கு நீங்கள் இப்பூவுலகை விட்டு வெளியேறிவிடலாம். பல்பம், பபிள்கம், எஸ்.எம்.எஸ், சதாம் உசேன், பாலஸ்தீன் எல்லாவற்றையும் மறந்துவிடலாம்.

இது ஒரு அற்புதமான உலகம். மிகுந்த பிரயத்தனப்பட்டு ஒவ்வொரு காட்சியையும் ஒவ்வொரு பாத்திரத்தையும், ஒவ்வொரு அசைவையும் உருவாக்கியிருக்கிறார் சகா குச்சி. பெயர்தான் குச்சி ஆனால் இவரது சாதனை தடிமனானது.



இதோ இவரது அடுத்த தயாரிப்பும் ஜப்பானைக் கலக்கிக் கொண்டிருக்கிறது. பெயர் ப்ளூ ட்ராகன். 'ட்ராகன் பால்' எனும் பொம்மை படத்துக்கு பொம்மை போட்ட அகிராடோரியாமா என்பவரை தனது ப்ளூ ட்ராகனுக்காக இழுத்துப் போட்டிருக்கிறார் சகாகுச்சி. இந்த டோரியாமாவுக்கு மனிதர்களைவிட ட்ராகனைத்தான் மிகவும் பிடிக்குமாம். குழந்தைகளுக்குத்தானே என்று எதையோ வரைந்து தள்ளாமல் ஒவ்வொரு இன்ச் சாக ஆழ்ந்து அனுபவித்து கட்டை விரல் இப்படியிருக்கும், காது மடல் இப்படியிருக்கும் என்று பார்த்துப் பார்த்து உருவாக்கியிருக்கிறார். ஏதோ ட்ராகனே நேரில் வந்து 'என்னை வரைஞ்சிக்கோ' என்று கன்னத்தில் கை வைத்துக் கொண்டு போஸ் கொடுத்ததைப் போல.

நீல ட்ராகன் கையைக் காலை உதைத்துக்கொண்டு பிறந்துவிட்டது. சுகப்பிரசவம். ஆஜானுபாகுவான உரு

# உலகம் இவ்வளவுதான்!



வம், சிவப்புக் கண்கள், டைனோசார் பற்கள். மூக்கு துவாரத்துக்கு அருகே கையைக் கொண்டு சென்றால் மூச்சு விடுவது கேட்கும். (இடது மூக்கு துவாரத்தின் அளவும் வலது மூக்கு துவாரத்தின் அளவும் ஒன்றுதான். சகாகுச்சி ஏற்கனவே நான்குமுறை அளந்துவிட்டார்.) நாம்கூட வீட்டில் ஒரு குட்டி ட்ராகன் வளர்க்கலாமா என்று ஏங்க வைக்கும். ட்ராகனின் அடிப்பொடி ஒரு ஜப்பானிய பொடியன், முக்கிய பாத்திரம், அசப்பில் சின்ன வயசு ஜாக்கிசான் மாதிரி இருக்கிறான். கலைந்த தலை, குண்டு துறுதுறு கண்கள், சிறிய மூக்கு, ட்ராகனின் விரல் அளவுதான் இருக்கிறான். இருவருமே கைகோத்து ஜோடி போட்டுக் கொண்டு கலங்கடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

**தூ**ங்கவிடாமல் தொல்லைப் படுத்துவதற்கு ஒரு ட்ராகனை அளித்த ஜப்பான் நிம்மதியாகத் தூங்குவதற்காக ஒரு புத்தகத்தை அன்பளித்து புண்ணியம் தேடிக்கொண்டிருக்கிறது. இந்தப் புத்தகத்தின் பெயர் உடோபியா (சர் தாமஸ் மூர் உருவாக்கிய கற்பனை உலகின் பெயர்). புத்தகப்பூச்சிக்கு அடுத்து புத்தகத்தை வெகுவாக நேசிக்கும் படிப்பாளர்கூட இந்தப் புத்தகத்தை பிரித்து நான்கு ப்க்கங்களுக்கு மேல் படிக்கமுடியாது. தலைக்கு வைத்துக்கொண்டு தூங்கிப் போய்விடுவார்.

அவ்வளவு 'அற்புதமாக' எழுதப் பட்டிருக்கிறது என்பதல்ல. அதன் வடிவமைப்பே அப்படித்தான். பிரித்துப் பார்த்தால்தான் சங்கதி விளங்கும். அதாகப்பட்டது, முதல் நான்கு பக்கங்களை வழக்கம்போல் ஒழுங்காக அச்சடித்திருக்கிறார்கள். ஆனால் போகப் போக எழுத்துக்கள் மங்கலாகிக்கொண்டே போகும். இன்னமும் திருப்பினால் அலையலையாக ஓடும். அங்கொன்றும் இங்கொன்றுமாக எழுத்துக்கள் பிரிந்து பறக்கும். வாசித்துக்கொண்டிருக்கும் பொழுதே கண்கள் செருகும். அப்படியே காலை நீட்டிக்கொண்டால் என்ன என்று தோன்றும். படுத்துக்கொண்டே படிக்கலாமே என்று தோன்றும். கண்களை ஒரு நிமிடம் மூடினால் என்ன புத்தகம் ஓடியா போய்விடும் என்று தோன்றும். புத்தகம் தலையணையாக மாறும்... பிறகு? கனவில் நீல ட்ராகன் சிவப்புக் கண்களை உருட்டிக் கொண்டு உங்களுக்கு இச்சுகிச்சு மூட்டும்.





- வேப்பங்குச்சி

# ‘ரஜினி போல வரணும்!’

எங்கக் குழுவுல எல்லா ஜாதி, மத நண்பர்களும் இருந்தார்கள். இப்ராஹிம், சுந்தரராஜ், ராமுவசந்தன், ரவீந்தரன், ஆழ்வார், அப்புறம் சுந்தரம்'னு ஒரு பிராமண பையன், எங்க குழுவுலேயே அதிகம் படிச்சவன். இந்தி, இங்கிலீஷ், மலையாளம்னு பல பாஷைகள் பேசுவான். அப்போதைய எங்களின் மொழி பெயர்ப்பாளன் சுந்தரம்தான், ஆனா ரொம்ப குசும்புக்காரன்; என்மேல் பிரியமாயிருப்பான். (சுந்தரம் இப்ப சேலத்துல பெரிய பதவியில் இருக்கார்)

ஒருமுறை கேரளா போயிருந்தோம். ஊரெல்லாம் சுற்றிப் பார்த்துட்டு ரெயில்வே ஸ்டேஷனுக்கு வந்தோம், கூட்டம் நிரம்பி வழியுது. முட்டிப் பார்த்தும் செகண்ட் கிளாஸ் டிக்கெட் கிடைக்கல. 'நாளைக்கு மதுரையில இருக்கணும் என்ன பண்றது'ன்னேன், ஆளுக்கொரு ஐடியா கொடுத்தாங்க, அப்ப சுந்தரம் என்ன செஞ்சான்னா, நேரா டிக்கெட் கவுண்டருக்குள்ள போய் மலையாளத்துல என்னவோ சொல்ல, கவுண்டரில் இருந்தவர் என்னைப் பார்த்துப் புன்னகை செய்தார். ஒரு வணக்கம் வைக்க, பதிலுக்கு நானும் சொன்னேன். 'உள்ளே வாங்க'னு என்னைக் கூப்பிட்டார், ஒண்ணும் புரியாமல் விழிச்சுக்கிட்டே போனேன். என் கையைப் பிடிச்சு குலுக்கினார். உட்கார சொல்லி, டீ, காப்பினு ராஜ உபசாரம், 'டேய் சுந்தரம் என்னடா பண்ணினே'னு மெதுவாகக் கேட்டேன், 'உங்கள நடிகர் சிவாஜியின் தம்பினு சொல்லி





# விஜயகாந்த் பேசுகிறேன்!

யிருக்கேன் பார்த்து நடந்துக்கோங்க தலைவா'ங்கறான், நான் அசடு வழிய நடித்தேன்,

மெட்ராஸ் வந்தா அண்ணனைப் (சிவாஜியை) பார்க்க முடியுமா?'னு அவர் கேட்க, 'நீங்க வாங்க சார், பார்த்துக்கலாம்'னு தமிழ்ல சொன்னேன், சுந்தரம் மொழி பெயர்த்தான், அப்புறமென்ன சுறுசுறுப்பாக டிக்கெட்டுகள் கொடுத்து அனுப்பினார்.

ஒரு நடிகரின் தம்பினு சொன்னதுக்கே இத்தனை மரியாதைன்னா நடிகருக்கு எத்தனை ராஜமரியாதை கிடைக்கும்...? இந்தச் சம்பவம்தான் எனக்குள் முதல் முதலாக சினிமா ஆசையை விதைத்தது.



* சுந்தரத்துடன் விஜயகாந்த்

மதுரையில் நாங்க உட்கார்ந்து அரட்டை அடிக்கும் கடைக்கு மேலே தான் 'சேனாஸ் ஃபிலிம்ஸ்' என்ற பெரிய திரைப்பட விநியோகஸ்தர் கம்பெனி இருந்தது. மதுரையில் பெரிய விநியோகஸ்தரான அவர் தினம் ஆபீஸ் வரும்போது எங்களைப் பார்த்து புன்னகை செய்வார். நான் அவரைப் பார்க்கும்போதெல்லாம் 'குட்மார்னிங் பாஸ்' என்பேன்.

என் சினிமா பிரவேசத்துக்கு அவர் தான் ஒரு வழிகாட்டியாக இருப்பார்னு அப்போ எனக்குத் தெரியாது. என் மரியாதைக்குரிய மனிதர் முஹம்மது மர்சூக் ஒருநாள் என்னை அழைத்தார்.

"ஆசை அறுபது நாள் படத்தின் 50-வது நாள் விழா தமுக்கம் மைதானத்தில் நடக்குது. அதில் ரஜினிகாந்த், விஜயகுமார், ஸ்ரீவித்யா, டைரக்டர்னு நிறையப்பேர் கலந்துக்கப் போறாங்க. அவங்களை பாதுகாப்பா பார்த்துக்கிற முழு பொறுப்பையும் உங்ககிட்டே தருகிறேன். நீங்க கவனமாப் பார்த்துக்கணும்''னு சொன்னார்.



* முஹம்மது மர்சூக்

"ஓ.கே பாஸ் நாங்க பார்த்துக்கறோம்'' என்றேன்.

பாண்டியன் ஓட்டலில் வந்து தங்கிய

நடிகர் நடிகைகளை ரொம்பப் பொறுப்பாக பார்த்துக்கொண்டோம். மறுநாள் கூப்பிட்டுப் பாராட்டினார்.

இது முடிந்து ரொம்ப நாட்களுக்குப் பிறகு ஒருநாள் என்னை அவசரமாகக் கூப்பிட்டிருந்தார். 'பொட்டேல் பொன்னம்மா' என்ற தெலுங்குப் படத்தை முஹம்மது மர்சூக் வெளியிட்டிருந்தார். அவருக்குப் போட்டியாக ஒரு விநியோகஸ்தர் தமிழில் வெளியான அதே படமான 'ஆட்டுக்கார அலமேலு'வை ரிலீஸ் செய்துவிட்டார்.

''இந்தப் போட்டியை எப்படிச் சமாளிக்கிறது, 'பொட்டேல் பொன்னம்மா'வை எப்படி வெற்றி பெறச் செய்வது தம்பி?''னு கேட்டார்.

''பாஸ்! இந்த இரண்டு படத்துலயும் நடிச்சுருக்கிறது ஒரே ஆடுதான். அந்த ஆடு சோழவந்தான்லதான் இருக்குது. அந்த ஆட்டுக்காரனை, எனக்குத் தெரியும். அவனையும் ஆட்டையும் அழைச்சுக்கிட்டு வந்து நம்ம படம் ஓடும் தியேட்டர்ல இடைவேளையில் படத்தில் ஆடு செய்த சாகசங்களை மேடையில் செஞ்சு காட்டினா நம்ம படத்துக்குக் கட்டாயம் ஆசையா வருவாங்க''ன்னேன் ''அப்படியே செய்யுங்க'' என்றார்.

நானும், இப்ராஹிமும் அப்படியே செஞ்சோம். 'பொட்டேல் பொன்னம்மா' மாபெரும் வெற்றி பெற்றது. இப்படித்தான் முஹம்மது மர்சூக் மனத்தில் இடம் பிடித்தேன்.

முஹம்மது மர்சூக் சாருக்கு, சினிமாத் துறையில் பல பெரிய நடிகர்களிடம், டைரக்டர்களிடம் நல்ல மதிப்பு இருந்தது. அதனால் அவருடைய நண்பர் ஒருவர் ஒரு பெரிய நடிகரின் கால்ஷீட்டை வாங்கிக் கொடுக்கச் சொன்னார். இவரும் முயற்சி செய்தார். அந்த நடிகர் ஒரு வருஷத்துக்கு கால்ஷீட் இல்லைனு சொல்லிட்டார். அப்போ என்ன நினைச்சாரோ! ஒருநாள் காரில் வந்து இறங்கியவர் என்னைக் கூர்ந்து கவனித்துப் பார்த்தார், பேசாமல் மாடிக்குப் போனார். அடுத்த பத்தாவது நிமிடத்தில் ஆபீஸ் பாய் வந்து 'சார், உங்களைக் கூப்பிடுறார்' என்றான். அவர் முன்னால் போய் நின்றேன்.

''சினிமாவில் நடிக்கிறீங்களா தம்பி?''னு கேட்டார்.

''ஐயோ சார்! நான் டிராமாவுலகூட நடிச்சது கிடையாது'' என்றேன்.

''நான் உங்களை நடிகனாக்கிக் காட்டறேன். நான் சொல்வதுபோல் போஸ் கொடுத்து போட்டோக்களை எடுங்க''னு சொன்னார். தன் கழுத்தில் இருந்த தங்கச்சங்கிலியை என் கழுத்தில் போட்டார். போட்டோக்கள் தயாரானதும் சென்னைக்கு என்னை அழைத்துப்போய் பல டைரக்டர்களிடம் அறிமுகப்படுத்தினார்.

சென்னையில் ஒருநாள், ஏவி.எம். ஸ்டூடியோவில் 'ப்ரியா' படப்பிடிப்பில் இருந்த ரஜினிகாந்திடம் என்னை அறிமுகம் செய்து வைத்தார். ரஜினிகாந்த் என்னைப் பார்த்தார். அப்புறம் அவர் அவருடைய பாணியிலேயே சிரித்துக்கொண்டே, 'என்னைப் போல இருக்கிற மாதிரி இருக்கு... என்ன, எனக்குப் போட்டியா?'-னு ரஜினி அவரிடம் ஜாலியாகக் கேட்க, அதற்கு அவரே இதமாகப் பதில் சொன்னார்.

வெளியே வந்து என்னைப் பார்த்து, ''என்றாவது ஒருநாள் ரஜினி போல் நீயும் வர வேண்டும். வருவாயா தம்பி?'' என்றார்.

''நிச்சயமாக வருவேன் பாஸ்''



- ரசிகப் பெருமக்களுக்கு அன்பான வேண்டுகோள். மேடைக்கு துண்டுசீட்டு அனுப்புவதற்குப் பதிலாக 3638 என்ற எண்ணுக்கு எஸ்.எம்.எஸ்ஸில் விருப்பப் பாடல்களை அனுப்பும்படிக் கேட்டுக் கொள்கிறேன்!

- ஞா. ஞானமுத்து

பொதுவாக, கறுப்பு மனிதர்களின் சிரிப்பு எனக்குப் பிடிக்கும், அதிலும் விஜயகாந்தின் சிரிப்பில் வசீகரம் இருக்கிறது.

'தமிழ்ச்செல்வன்' படத்தின் முதல் காட்சியை சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சியின் அருகே அவரை நிறுத்தி அவர் சிரிக்கும் காட்சியைப் படமாக்கினேன். அவரது அந்த, கள்ளமில்லாத வசீகரச் சிரிப்பு என்னை மட்டுமல்ல எல்லோரையும் கவர்ந்துவிட்டது.

விஜயகாந்த் ஒரு நல்ல நடிகர் மட்டுமல்ல நல்ல மனிதர். மண்ணின் மணம் மிக்கவர், தமிழன். அவர் சினிமாவில் வேஷம் போடுவார் நிஜ வாழ்வில் வேஷம் போட மாட்டார், அவரது உடல்தான் கறுப்பு, உள்ளம் வெண்மை. எதையும் துணிச்சலாகச் சொல்லும் குணம் கொண்டவர்.

அவர் செய்து வரும் நற்பணிகளை தூர இருந்து பார்த்து ரசிப்பவன் நான். அவர் செய்து வரும் நற்பணிகள் இன்னும் பெரிய அளவில் எல்லோருக்கும் கிடைக்க வேண்டும். அவர் பணத்துக்கு மதிப்பு தர மாட்டார். ஆனால் அன்புக்கு அடிமையாகி விடுவார்.''

– பாரதிராஜா



## விஜயகாந்த் பற்றி வி.ஐ.பி!

என்று நானும் உற்சாகம் மாறாமல் பதில் சொன்னேன்.

ஒருநாள் டைரக்டர் பி. மாதவனிடம் என்னை அறிமுகம் செஞ்சு என்னோட போட்டோக்களைக் காட்டி, ''இவன் என் தம்பி, இவனுக்கு உங்க படத்துல ஒரு நல்ல வாய்ப்புத் தரணும். உங்க படத்தின் மதுரை ஏரியா விநியோக உரிமையை நான் எடுத்துக்கறேன்'' என்றார்.

அப்போது பி. மாதவன் 'என் கேள்விக்கு என்ன பதில்' என்ற படத்தை எடுத்து வந்தார், ''பையன் கறுப்பாயிருந்தாலும் நல்ல களையாயிருக்கிறான்'' என்று சொல்லி அந்தப் படத்தில் ரஜினியின் தம்பி வேஷத்தை எனக்குக் கொடுத்தார். அட்வான்ஸ் நூற்றியொரு ரூபாய் கொடுத்தார் சந்தோஷமாக, மதுரைக்குப் புறப்பட்டோம்.

'என் கேள்விக்கு என்ன பதில்?' படத்தின் ஷூட்டிங் நடந்தது. நான் சென்னைக்குப் போய் சாலிகிராமத்தில் இருக்கும் மர்சூக் சார் வீட்டில் தங்கி நடித்தேன். படப்பிடிப்பு ஒரு மூணு நாள் நடந்தது. அப்புறம் என்னைக் கூப்பிடவே இல்லை. படம் ரிலீஸாகும் சேதி கேட்டுப் போய் விசாரித்தேன், ''உனக்குத் தமிழ் சரியா பேச வரல. அதனால படத்துல இருந்து தூக்கிட்டோம்''னாங்க. இதைக் கேட்டு அதிர்ந்துபோயிட்டேன்.

முஹம்மது மர்சூக் ஏரியாவுக்குப் படத்தை எடுக்க மாட்டேன்னு சொல்லிட்டாரு எனக்காக... அப்புறம்....

(சொல்றேன்)

படங்கள் உதவி: **சஜோ**

# போட்டுத் தாக்கு!

-பரமு



**சினேகாவிடம் கேட்கக்கூடாத பத்துக் கேள்விகள் :**

1. 'பத்துக்குள்ளே நம்பர் ஒண்ணு சொல்லு. உன் நெஞ்சுக்குள்ளே யார் என்று சொல்வேன்'னு பாடினப்போ உறுத்துச்சா?

2. நல்லா ஓடின படங்களைவிட தியேட்டரை விட்டு ஓடின படங்கள்தான் உங்களுக்கு அதிகமாமே?

3. நீங்க மாடர்ன் ட்ரெஸ் போட்டு வந்தா ரசிகர்கள் 'வீல்'னு அலர்றாங்களாமே!

4. பத்திரிகைகளுக்கு 'மறுப்பு' கொடுக்கறதுல உங்களை யாரும் மிஞ்ச முடியாதாமே?

5. வைர நெக்லஸ், சர்ஜரி ஆபரேஷனுக்கு எல்லாம் எப்படி கரெக்டா ஸ்பான்ஸர் பிடிச்சீங்க?

6. ஜெயம் 'ரவி', 'ரவி' கே. சந்திரன், கே.எஸ். 'ரவி'க்குமார், நாகா, இவங்ககிட்ட எல்லாம் இனி 'நடிக்க' மாட்டீங்களாமே?

7. காதல், கல்யாணம்னு மூணு மாசத்துக்கு ஒருமுறை கிசுகிசுவுல மாட்டிக்கலைன்னா உங்களுக்குத் தூக்கமே வராதாமே?

8. உங்க ஒட்டுப்போட்ட படம் ரொம்ப ரியலா இருக்கே எப்படி?

9. வெளிநாட்டுத் தொழிலதிபரை மணக்க மறுக்கற நீங்க எல்லாம் ஒரு தமிழ் சினிமா நடிகைதானா?

10. 'ஒவ்வொரு கிசுகிசுக்களுமே சொல்கிறதே...'னு உங்களுக்கு நீங்களே பாடிக்கறீங்களாமே!

# 01.01.2006 முதல் 07.01.2006 வரை

**மேஷம்:** எடுத்த காரியத்தை வெற்றி கரமாக முடிக்கும் உங்களுக்கு இந்த ஆண்டு ஆரம்பமே வெற்றி வாகை சூடும். பொருளாதார முன்னேற்றம் கிட்டும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உத்தியோகங்களில் வேலை மாற்றம், பதவி உயர்வு, தூரதேச பிரயாணம் செல்லும்படி இருக்கும். நல்ல வேலை வாய்ப்புத் தேடி வரும். செவ்வாய்க்கிழமை அன்று துர்க்கை அம்பாளுக்கு சிவப்பு வஸ்திரம் சாத்தி அர்ச்சனை செய்யவும்.

**ரிஷபம்:** இந்த ஆண்டு ஆரம்பத்தில் சோதனைகள் இருந்தாலும், வருடத்தின் மத்திம காலத்தில் வெற்றி வாகை சூடுவீர்கள். நெருங்கிய உறவினர், நண்பர்களை விட்டு விலகிச் செல்லும் சூழ்நிலை உருவாகும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் கூட்டணிக்குள் மனக்கசப்பு ஏற்பட்டு பங்குதாரர் விலக நேரிடும். பெருமாளுக்குப் பட்டுவஸ்திரம் சாத்தி அர்ச்சனை செய்தால் கஷ்டங்கள் விலகி நற்பலன் அதிகமாகும்.

**மிதுனம்:** இந்த வருடம் வெற்றிகரமான ஆண்டாகப் பிறக்கிறது. தனம், வாக்கு, புகழ், கீர்த்தி மேலோங்கும். பொருளாதாரக் கஷ்டம் இருக்காது. திருமண காரியம் கைகூடும். குழந்தைப் பேறு கிட்டும். புதிய முயற்சி கைகூடும். நினைத்தது நடக்கும். புதிய தொழில் துவங்க நல்ல காலம். வருடத்தின் கடைசி பகுதி சற்று சுமார் ஆக இருக்கும். மகா விஷ்ணுவுக்குப் பச்சை வஸ்திரம் சாத்தி அர்ச்சனை செய்யவும்.

**கடகம்:** முதல் ஆறு மாதம் சுமார் ஆகவும், பின்வரும் ஆறு மாதம் சிறப்பானதாகவும் இருக்கும். இருக்கும் இடம், தொழில் ஸ்தானம் மாற வேண்டிய சூழ்நிலை உருவாகும். மாணவ/மாணவிகள் அதிக கவனமுடன் படிப்பது நல்லது. மேல்படிப்புக்கு வெளிநாடு செல்லும் சூழ்நிலை ஏற்படும். பொருளாதாரக் கஷ்டங்கள் விலகும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். குடும்பப் பெண்களுக்கு நல்ல மதிப்பும் மரியாதையும் கிடைக்கும். சந்திரனுக்கு வெண்பட்டு வஸ்திரம் சாத்தவும்.

**சிம்மம்:** சோதனைகளும் சாதனைகளும் படைத்த ஆண்டாகவே இருக்கும். எதிலும் கவனமும் நிதானமும் தேவை. பொறுமையுடன் செயல்பட வேண்டும். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையுடன் செயல்படுவது நல்லது. புதிய முயற்சிகளைச் சற்றுத் தள்ளிப் போடவும். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. கூட்டுத் தொழில் செய்தால் மனக்கசப்பு ஏற்பட்டு விலக நேரிடும். கால கிரஹங்



# நடக்குமென்பார்; நடக்கும்!

## தஞ்சை பரத்வாஜ்



**எ**ன்னுடைய இரண்டு மகன்களின் ஜாதகங்களை அனுப்பியுள்ளேன். அவர்களுடைய படிப்பு, எதிர்காலம் எப்படியிருக்கும்?

- ராஜம், சென்னை

சிரஞ்சீவி ஸ்ரீநிவாஸ் ஜாதகப்படி 14.10.2005 முதல் செவ்வாய் தசை ஆரம்பமாயிருக்கிறது. மகனுக்கு, பிடித்த கல்வியைப் படிக்கக்கூடிய ஜாதகம். தூர தேசம் போய் படிக்கக்கூடிய வாய்ப்பு இருக்கிறது. நல்ல வேலை கிடைக்கும். எதிர்காலம் நன்றாக இருக்கும்.

சிரஞ்சீவி முகுந்த் ஜாதகப்படி சுக்ரதசை நடைபெறுகிறது. வெளிநாட்டில் போய் படித்து அங்கேயே வேலை பார்க்கும் ஜாதகம். பின்வரும் சூரிய தசை ஆறு வருடங்கள் நற்பலனை அளிக்கும்.

**எ**ன் சகோதரனுக்குத் திருமணம் நடைபெறுமா?

- குருராஜ், சென்னை

உங்கள் சகோதரனுக்கு 2006-ல் திருமணம் முடியும். உறவில்லாத இடத்தில், ஒரே பெண்ணாக இருக்கும் வீட்டில் பெண் அமைவாள். சர்ப்பதோஷம் உள்ள ஜாதகத்தைப் பார்க்கவும்.

**எ**ன் மகனுக்குத்

கள் சரிவர இல்லை என்பதால் இறைவழிபாடு நற்பலனைத் தரும். கலைஞர்களுக்குச் சுமாராக இருக்கும். சூரிய வழிபாடு பண்ணவும். ஆஞ்சநேயர் நாமாவளி படித்து வரவும்.

**கன்னி:** இந்த ஆண்டு பொன்னான ஆண்டாக இருக்கும். நினைத்த காரியம் நடக்கும். வீடு வாங்கலாம். திருமண காரியம் கைகூடும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். பொருளாதாரக் கஷ்டம் விலகும். படிக்கும் மாணவ/ மாணவிகள் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெறுவார்கள். வருடத்தின் முதல் ஒன்பது மாதம் பெரும் நற்பலனைத் தரும். கணவன்/ மனைவி உறவு நன்றாக இருக்கும். தனப்பெருக்கம் காணும். கலைஞர்களுக்குப் பொன்னான நேரம். உத்தியோக வேலையில் முன்னேற்றம், வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து அணுகும். புதன் பகவானுக்குப் பச்சைப் பட்டு வஸ்திரம் சாந்தி வழிபாடு செய்யவும்.

**துலாம்:** இந்த வருடம் சிறப்பான ஆண்டாக அமையும். தீர்க்க முடியாத பிரச்னைகள் சந்தோஷமாக முற்றுப் பெறும். வழக்கு வெற்றி அளிக்கும். நோய் நொடி தீரும். திருமண காரியம் கை கூடும். தொழில் துறையில் வெற்றி அளிக்கும். புதிய முயற்சி கைகூடும். படிக்கும் மாணவ/ மாணவிகள் நல்ல மதிப்பெண்கள் பெறுவார்கள். குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். சுக்கிரனுக்கு வெண்பட்டு வஸ்திரம் சாந்தி அர்ச்சனை செய்ய நற்பலன் கிடைக்கும்.

**விருச்சிகம்:** இந்த ஆண்டு பத்திரிகைகளில் பெயர், புகழ் வரும். பொருளாதாரக் கஷ்டம் இருக்காது. தனம், வாக்கு, மேன்மை ஏற்படும். கணவன்/மனைவி உறவு நன்றாக இருக்கும். உல்லாசப் பிரயாணம் ஏற்படும். வீட்டில் சுபகாரியம் நடக்கும். உடல் நலம் பாதிக்காது. சிலருக்கு தாய் தந்தையரை விட்டு அதிக தூரம் போகும்படி சூழ்நிலை

திருமணம் எப்போது?

- கே. கௌசல்யா, திருச்சி

உங்கள் பையனுக்கு 38 வயது ஆரம்ப மாகும்போது திருமணம் கைகூடும். உடன் பிறப்பு இருவர் உள்ள இடத்தில் திரு மணம் நடக்கும்.

**எனது மகனின் திருமணம் தடை பட்டு வருகிறது. எப்போது கைகூடும்?**

- ஏ. சேஷாசலம், குருங்குளம்

உங்கள் பையனுக்கு 35 வயதில் திரு மணம் முடியும். உடன்பிறப்பு இருவர் உள்ள வீட்டில் வரன் அமையும். படித்த, பண்புள்ள, வேலையிலுள்ள பெண் அமைவாள்.

**எனக்கு வெளிநாட்டில் தாற்காலிக வேலை கிடைத்துள்ளது. நிரந்தரமான வேலை எப்போது அமையும்?**

- பெயர் வெளியிட விரும்பாத குழித்துறை வாசகர்

தற்போது குருதசை, குருபுத்தி நடக்கிறது. 26.12.2006க்குப் பிறகு நிரந் தரமான வேலை கிடைக்கும். வெளி நாட்டுப் பணி உங்களுக்கு நற்பலனைத் தரும். சந்திரனுக்கு 8-ல் இருக் கும் கேதுவால் எந்தத் தீங்கும் ஏற் படாது. ○

# பரத்வாஜ் பதில்கள்

இருக்கும். சிலர் தனிக்குடித் தனம் போவார்கள். செவ்வாய்க் கிழமைதோறும் முருகன் வழிபாடு செய்து வரவும்.

**தனுசு:** உங்களுக்கு இந்த ஆண்டு பொன்னான ஆண்டாகும். தனம், வாக்கு, மேன்மை சிறப்பானதாக இருக்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். எதிர் பாராத தன ஆதாயம் கிட்டும். ஆடை, ஆபரண அலங்காரப் பொருட்கள் சேரும். மாணவ/ மாணவிகள் படிப்பில் அதிக மதிப் பெண்கள் பெறுவார்கள். திருமண காரியம் கைகூடும். குழந்தைப் பேறு இல்லாதவர் களுக்குக் குழந்தைப் பேறு கிட்டும். பூர்விக சொத்து பாகப்பிரிவினை ஆகும். சிலருக்கு வீடு/வாகனம் வாங்கும் யோகம் கிட்டும். குரு பகவானுக்கு மஞ்சள் வஸ்திரம் சாத்தி அர்ச்சனை செய்தால் நற்பலன் மிகுதி ஆகும்.

**மகரம்:** இந்த ஆண்டு நற்பலனை அளிக்கும். தனம், கல்வி, வாக்கு மேலோங்கும். மாணவ/மாணவிகள் தேர்வில் அதிக மதிப் பெண்கள் பெறுவார்கள். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். பணப் பற்றாக்குறை வராது. திருமண காரியம் கைகூடும். செலவுகள் கட்டுக் கடங்கி இருக்கும். கணவன்/ மனைவி உறவு நன்றாக இருக்கும். கூட்டுத் தொழில் செய் பவர்கள் நற்பலனை அடைவார்கள். ஆஞ்ச நேயருக்கு வடை மாலை சாத்தி அர்ச்சனை செய்துவர நற்பலன் மிகுதி ஆகும்.

**கும்பம்:** இந்த வருடம் தொட்டது துலங்கும் ஆண்டாகும். சுபகாரியம் நடக் கும். பொருளாதாரக் கஷ்டம் விலகும். வழக்கு வியாபாரம் வெற்றி அளிக்கும். எதிரிகள் தொல்லை விலகும். புதிய வேலை கிடைக்கும். பட்டம், பதவி, புகழ் தேடி வரும். உடல் நிலை பாதிக்காது. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். ஆஞ்சநேயர் நாமாவளி படித்து வருதல் நலம் பயக்கும்.

**மீனம்:** ஆரம்பத்தில் சோத னையாக இருந்தாலும் ஆண்டின் மத்திம காலத்தில் சிறப்பானதாக இருக்கும். யாரிடமும் வாக்குவாதம் வேண்டாம். உணவுக் கட்டுப்பாடு உடல் ஆரோக்கியத்தில் நற்பலனை அளிக்கும். குழந்தைகளைப் பற்றிய மனக்கவலை தீரும். குடும்பத்தில் சுபகாரிய நிகழ்வுகள் நடக்கும். குடும்ப உறவில் விட்டுக்கொடுத்து அனுசரித்துப் போவது நல்லது. குருபகவானுக்கு வியாழனன்று மஞ்சள் வஸ்திரம் சாத்தி அர்ச் சனை செய்யவும். ○

● சியாமளா ஈஸ்வரன்,
தேவூர் மேட்டுக்கடை.

? தமிழக காங்கிரசை தி.மு.க நடத்துகிறதோ என்ற சந்தேகம் எழுவதாக திண்டிவனம் ராமமூர்த்தி கூறியுள்ளது பற்றி?

! மூக்கணாங்கயிறை தி.மு.க விடமிருந்து விடுவிக்க வேண்டுமானால், தமிழக காங்கிரஸ் ஒரு தலைமையின்கீழ் ஒற்றுமையாகச் செயல்பட வேண்டும். அதற்கு முயற்சி செய்யாமல் திண்டிவனத்தார் இப்படித் திமிறிக் கொண்டு 'கமெண்ட்' அடிப்பதால் கயிற்றுப்பிடி மேலும் இறுகத்தான் செய்யும்.

● எல்.எம். மங்கை,
திருவண்ணாமலை.

? தயாநிதி மாறன் - பிளஸ், மைனஸ் ப்ளீஸ்?

! சுறுசுறுப்பை நிதியாகப் பெற்றுள்ளது பிளஸ். தமிழகத்துக்கு மட்டும் தயை புரிவது போன்ற எண்ணம் உருவாவது மைனஸ். மத்திய அமைச்சர்கள் மற்ற மாநிலங்களுக்கு என்ன செய்தார்கள்(?) என்பது பிரபலப்படுத்தப்பட வேண்டும். விழாக்கள் கட்சி கண்ணோட்டத்தில் நடப்பது நிற்க வேண்டும்.



• கதறும் மாநிலங்கள்!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? கங்குலி நீக்கப்பட்டது பற்றி கருத்து கூற விரும்பவில்லை என்கிறாரே அத்வானி?

! கனவிலே ஜின்னா வந்து மிரட்டியிருப்பார்!

● ப.இராம் முருகன், சிவகங்கை.

? இன்றைய தமிழக அரசியல் சூழ்நிலையில் அரசியல் சாணக்கியன் யார்? அரசியல் ராஜதந்திரி யார்?

! கூட்டணி கட்சிகளுக்குச் சாமர்த்தியமாக சீட் ஒதுக்கும்பொழுது சாணக்கியன் யார் என்பது தெரிய வரும். தேர்தல் முடிவுகளின்போது ராஜதந்திரி வெளிப்படுவார்.

● சோமதேவராசன், நாச்சியார்கோயில்.

? கமிஷனை(?)ப் பற்றி ஆளும் கட்சியில் இருக்கும்போது ஒரு விதமாகவும் எதிர்கட்சியில் இருக்கும்போது வேறுவிதமாகவும் நம் அரசியல்வாதிகள் பேசுகிறார்களே... (உ.ம்: ராமன் கமிஷன் பற்றி கலைஞர்) நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

! அமரர் கல்கி சொன்னதைத்தான்

• மிரட்டும் கனவு!



• மிளிரும் தகுதி!



• இறுகும் லகான்!



• கசக்கும் விதிகள்!



சொல்கிறேன் - பிரச்னையின் தலையில் கல்லைப் போடு அல்லது கமிஷனைப் போடு!

● கு. கணேசன், பனங்கோட்டூர்.

? தொகுதி மேம்பாட்டு நிதியை ஒதுக்க எம்.பிக்கள் லஞ்சம் வாங்கி சிக்கிக் கொண்டதையடுத்து, அத்திட்டத்தை ரத்து செய்ய வேண்டும் என பல எம்.பிக்கள் கோரியுள்ளனரே?

! இந்தத் திட்டம் அமுலுக்கு வந்தபோதே, லஞ்ச - ஊழல் தாண்டவமாடும் என்று தராசு உட்பட பலரும் எச்சரித்தனர். கேட்பார்தான் இல்லை. தொகுதிக்கு நன்மை செய்யுமாறு அரசை வற்புறுத்துவதும், திட்டமிடப்பட்ட பிறகு அதனை விரைவாகவும் நேர்மையாகவும் அமல்படுத்த விழிப்புடன் இருந்து ஒத்துழைப்பதுமே எம்.பி, எம்.எல்.ஏக்களின் பணி. இப்ப எல்லாம் மாறிப்போச்சு. தேர்தல் செலவு முதலீடு; பெறும் லஞ்சம் லாபப் பங்கீடு என்றாகிப் போச்சு!

● எம்.எஸ். மணி, சென்னை - 20*

? ராஜாஜி நினைவு விருது நல்லகண்ணு போன்ற தலைவர்களுக்குக் கிடைக்க வழி இல்லையா?

! வழி பற்றி பரிசை வழங்குவோர்தான் கூற முடியும். ஆனால், நல்லகண்ணு போன்ற தலைவருக்குத் தரப்பட்டால், ராஜாஜி கொள்கைக்கு அவர் முரண்பட்டவர் என்ற போதிலும், நேர்மை - கொள்கைப் பிடிப்பு, பொதுவாழ்விலும் தனி வாழ்விலும் தூய்மை/எளிமை என்ற அடிப்படையில் பொருத்தமான தேர்வாகவே இருக்கும்.

● எம். குணசேகரன், வேலாயுதம்பாளையம்.

? கிறிஸ்துவ தேவாலயங்களில் அன்னதான திட்டம் தொடங்கப்பட்டிருப்பது பற்றி...?

! ஏழைகளுக்கு அன்னதானம் என்பது நமது மரபில் உண்டு. திருவிழா சமயங்களில் மக்கள் பெருமளவில் கூடும் போது நடத்தலாம். ஆனால், அதுவே நித்திய நியதியாகிவிட்டால் சோம்பலையே வளர்க்கும். இலவசங்களை விட வேலை வாய்ப்புகளைப் பெருக்குவதே நல்லது. நிற்க; மாதா கோயில்களில் அன்னதானத்துக்குப் பணம் எங்கேயிருந்து வருகிறது என்கிற மர்மத்தை விளக்குவது முதல்வரின் முதல் கடமை.

# தயாநிதி மாறனின் பிளஸ் - மைனஸ் என்ன?



* இனிக்கும் தேர்வு!

● என். சண்முகம், திருவண்ணாமலை.

? கேள்வி கேட்க பணம் வாங்கிய 11 எம்.பிக்களின் பதவி பறிக்கப்பட்டது சரியான நடவடிக்கையா?

! பகிரங்க நிரூபணம் இருக்கும்போது, குற்றம் புரிந்த எம்.பிக்கள் விரைவில் தண்டிக்கப்பட்டது நியாயமே. நாடாளுமன்றத்துக்கு உள்ள உரிமையை எல்லை கடந்து பயன்படுத்தியதாகக் கூற முடியாது. ஆனால் ஒன்று; கல்லெறிந்தவர்கள் பாவம் செய்யாதவர்களா என்று ஏசுபிரான் கேட்கக் கூடும்.

● ஏ. சுகுமார், காட்பாடி.

? சிறுசேரி - சிப்காட் நில விற்பனை

முறைகேடு வழக்கு விச்வ ரூபம் எடுக்குமா?

! விச்வரூபம் எடுப்பது நல்லது. வேறு பல வழக்குகள் போல் மறுபடி வாமன வடிவமாகி, மேலும் நலிந்து காணாமல் போவது நல்லதல்ல.



★ மணக்கும் பக்தி!

● எஸ்.எம். ஷாஜஹான்,
மேலப்பாளையம்.

? தொட்டி ஜெயா, சண்டக்கோழி, சிவகாசி, ஆறு, இங்கிலீஷ்காரன் - இப்படிப் பொருந்தாத பெயர்களை வைத்துப் படம் எடுக்கிறார்களே... படத்தோடு தலைப்பு ஒட்டுவதில்லையே - ஏன்?

! டைட்டில் படத்துடன் ஒட்டுகிறதா என்பதை யார் கவனிக்கிறார்கள்? ரசிகர் மனம் படத்துடன் ஒட்டுகிறதா, சட்டுபுட்டென்று துட்டு கைக்கு வருகிறதா என்பதுதானே லட்டு பார்வை!

● யமுனா ரெங்கநாதன்,
சென்னை - 40.

? ஆத்திகவாதியான அமரர் கிருபானந்த வாரியாருக்குத் தபால் தலை வெளியிட வேண்டும் என்று நாத்திக வாதியான கலைஞர் கோரியிருப்பது வியப்பளிக்கிறதே?

! அந்த வேண்டுகோளுக்கு, வாரியாரின் தமிழ்ப் (திருப்புகழ்) புலமையைக் கண்டு பிரமித்ததாகக் காரணம் கூறினார் கருணாநிதி. மக்கள் மனத்தில், பக்திமிக்க அவரது எளிய பிரவசன ஆற்றலே குடிகொண்டிருக்கிறது. ஆத்திகத்தை ஏற்காவிட்டாலும், வாரியாரின் இந்தப் பெருமையை ஏற்று, கருணாநிதி பேசியிருந்தால் இன்னும் கௌரவமாக இருந்திருக்கும்.

● ஆர். ஜெயச்சந்திரன்,
தேனேரிப்பட்டி.

? தே.மு.தி.க கொள்கையில் உறுதி என்றால் நிர்வாகிகள் கட்சித் தேர்தல் மூலம் அல்லவா வர வேண்டும். இங்கும் நியமனங்கள்தானே?

! இதை விடவும் சர்வாதிகாரப் போக்கில் கட்சியின் விதிமுறைகள் அமைந்திருப்பதால்தான் தேர்தல் கமிஷன் கட்சியை அங்கீகரிக்க மறுத்துவிட்டது. 'எல்லா விஷயங்களிலும் தலைவரின் முடிவே இறுதியானது' என்கிற விதியையும் இளை விதிகளையும் ஜனநாயகமாக்கி மறுமுறை மனு செய்தாக வேண்டும். கேப்டன் அனுபவத்தில் புரிஞ்சுக்குவார்.

● ஏ.ஜி. முகம்மது தௌஃபீக்,
திருநெல்வேலி.

? இந்த ஆண்டின் சிறந்த மனிதனாக பில் கேட்ஸ் தேர்வு செய்யப்பட்டிருப்பது குறித்து?

! 'மனி'யும் பண்ணத் தெரிகிறது; மனிதாபிமானமும் நிறைந்திருக்கிறது. நல்ல தேர்வுதானே.

● எஸ். கருணையானந்தம்,
உசிலம்பட்டி. ❐

? கூவம் ஆற்றின் கரையில் அரசின் புறம்போக்கு நிலத்தில் எம்.ஜி.ஆர் பெயரால் கல்லூரி கட்டிடங்கள் இயங்கி வந்தது இப்போதுதான் தெரிய வந்ததா?

! தண்ணி வெள்ளம் இப்பத்தான் வந்துச்சு; வேற ஏதாச்சும் வெள்ளம் ஏற்கெனவே பாய்ஞ்சிருக்கும்! ○

❐ ரூ 100 பரிசு பெறுபவர்

எஸ். கருணையானந்தம்,
கார்த்தி ஸ்டோர்,
முருகன் கோவில் தெரு,
உசிலம்பட்டி
625 532

★ ரூ 50 பரிசு பெறுபவர்:

எம்.எஸ். மணி
5, ஜெயா அபார்ட்மெண்ட்ஸ்,
15, ஜெயராம் அவென்யூ,
சாஸ்திரி நகர், அடையாறு,
சென்னை 600 020

# சின்னான் [வடக்கு] செய்திகள்



"ஹேய் ஹேய்... உய்... டுர்ர்... பக்பக்" அப்படினு அந்த வீட்டுல இருக்குற ஆடு, மாடு, கோழி, குதிரை எல்லாத்தையும் விரட்டிட்டு, சாணியை எல்லாம் அள்ளிப் போட்டுட்டுத்தான் அந்த வீட்டுல குடியேற முடியும் அந்தப் புது முதல்வரால! நீங்கதான் புத்திசாலியாச்சே! யாரு, எங்க, என்னன்னு புரிஞ்சுருக்குமே! ஆமாங்க, பீகார்ல நம்ம நிதிஷ் குமாருக்குத்தான் இந்த நிலைமை. முதல் மந்திரிக்குன்னு அதிகாரப் பூர்வமா ஒதுக்கப்பட்ட வீட்டில இருந்து இன்னும் லாலு-ரப்ரி தங்களோட கால் நடைகளைப் பத்திக்கிட்டு காலி பண்ண லையாம். ஆடு மாடுகளைக் கட்டிப் போட வசதியா புது கிரவுண்டு ஒன்னைத் தேர்ந் தெடுத்திருக்காங்களாம். நல்ல நாள் பாத்து மாறுவாங்களாம். அதே மாதிரி முதல் சட்டசபை எதிர்க்கட்சித் தலைவியா இருக்குற ராப்ரிக்கு, சட்டசபை வளாகத்துல ஒதுக்கப்பட்டிருக்கிற வீட்ல டாய்லெட் வசதி இல்லியாம்! அதனால அதை வேண்டாம்னு ஒதுக்கிட்டாங்களாம். என்னங்க இது நியாயம், கால்நடைகளுக்கே டாய்லெட் கட்டிக் கொடுக் கிற பரம்பரைல வந்தவங்களுக்கு, டாய்லெட்டே இல்லாத வீட்டைக் கொடுக்கலாமா?

உமாபாரதி அயோத்திக்கு கால்நடையாப் போறப்போ, ஐ மீன் பாதயாத்திரை போறப்போ, சர்த்தார்பூர்னு ஒரு ஊர்ல, தொண்டர்கள் தலைவிக்கு அவங்களோட ஆதரவைக் காண் பிக்க, உமாவோட எடைக்கு எடை ரத்த தானம் பண்ணுனாங்களாம். உமா 60 கிலோவாம். 80 கிலோ ரத்தம் சேர்ந்துச்சாம். ரத்த வங்கியில கொடுத்தாங்களாம். இப்படி எல்லாத் தலைவி களுக்கும் தொண்டர்கள் ஆதரவைக் காட்ட நெனைச்சாங்கன்னா... 'வெயிட்'டான தலைவி களோட தொண்டர்கள்... அட ஒண்ணுமில்ல, விடுங்க!

'ஜன்மாத்'னு ஒரு டீவியில அந்த எம்.பி. கம் நடிகரைப் பேட்டி எடுத்திருக்காங்க. எடுத்த பெண் நிருபர் பேரு ஸ்வேதா ரஞ்சன். 'தாவுத் இப்ராகிம்' பத்திக் கேட்டவுடனே அவரு பர பரப்பா, படபடப்பா உணர்ச்சிவசப்பட்டுக் கொட்ட ஆரம்பிச்சுட்டாராம். எல்லாம் கேசட்ல பதிவானதும், 'ரொம்பவே உளறிட்டேனோ'ன்னு மனுசனுக்கு கிலி வந்துடுச்சாம். 'சொன்னதை யெல்லாம் ரப்பரை வைச்சு அழிச்சிருங்க. கேசட்டைத் திருப் பித் தாங்க'ன்னு அவரு சொல்ல, பெண் நிருபர் மறுக்க, தகராறு முத்திப் போயி நிருபரை அடிச்சு, கேசட்டைப் புடுங்கிட்டு வந்துட் டாராம் எம்.பி. இப்போ இது போலீஸ் கேசு ஆயிருக்கு. கோவிந்தா! கோவிந்தா!

'வழுக்கைத் தலையில முடி வளர என்ன பண்ணணும்?' 'விக்கலுக்கும் நக்கலுக்கும் என்ன வித்தியாசம்?' 'நமீதாக்கு தயிர் வடை பிடிக்குமா?' - இப்படி ஒரு மூணு கேள்விக்கு எனக்குப் பதில் தெரியணும். ஏதோ பாத்து போட்டுக் கொடுக்கிறேன். யாராவது எம்.பிக்கள் பாராளு மன்றத்துல கேட்டு பதிலைச் சொல்றீங்களா?

படம் : கோவிந்தா

"கிரேஸி மோகன்சார்கிட்டே நான் ஜோக்ஸ் சொன்னப்போ அசந்துட்டார். 'ஆஹா அம்ருதா, நீ ஜோக்ஸ் சொல்றதைப் பார்த்தா நான் உஷாரா இருக்கணும் போலிருக்கே'ன்னு மனசார வாழ்த்தினார். என் டைமிங் சென்ஸ் அவருக்கு ரொம்பப் பிடிக்கும்" என்று குதூகலிக்கும் அம்ருதாவுக்கு வயது பதின்மூன்றுதான். ஆனால் சென்னையிலுள்ள ஹ்யூமர் க்ளப்புகளில் அம்ருதா பெயர் ஏகப் பிரபலம். நாரதகான சபாவில் ஆயிரம் பேர் கூடியிருந்த திருவல்லிக்கேணி ஹ்யூமர் க்ளப் ஆண்டு விழாவில் அனைவரையும் தம் நகைச்சுவையால் அசத்தி சிறந்த நகைச்சுவையாளர் விருது வாங்கியது திருப்புமுனையாக அமைந்து விட்டது.

"என் ரத்தத்துல நகைச்சுவையும் கலந்து ஓடுறதைக் கண்டுபிடிச்சதே என் தாத்தாதான். அதுக்கப்புறம் திருவல்லிக்கேணி, பெசன்ட் நகர், ஆதம்பாக்கம்னு வரிசையா அந்தந்த ஏரியா ஹ்யூமர் க்ளப்கள்ல விருது வாங்கி போட்டோவுக்கெல்லாம் போஸ் கொடுத்தாச்சு. சில தனியார் விழாக்கள்ல சிறப்புப் பேச்சாளரா கூப்பிட்டு, என்னையும் சந்தோஷப்படுத்தினாங்க. அவங்களும் நல்லா



# ஆஹா அம்ருதா!

ஜிம் கேரி - ஹாலிவுட்டின் எவர்க்ரீன் நகைச்சுவைக் கதாநாயகன். இன்றைக்கு அதிக சம்பளம் வாங்கும் காமெடி நடிகரான இவருடைய நகைச்சுவைப் படங்களுக்கு சர்வதேச அளவில் செம மார்க்கெட். வெளியாகும் ஒவ்வொரு படமும் வசூல் மழை பொழிகிறது. நம்மூர் நடிகர்கள் போலத்தான் இவருடைய பளாஷ்பேக்கும். துவக்கத்தில் சின்னச்சின்ன நாடகங்களிலும் திரைப் படங்களிலும் துண்டு துக்கடா வேஷம் கட்டிவந்தார். இவருடைய வாழ்க்கையை அடியோடு புரட்டிப் போட்டது டி.வி. நாடகம் 'இன் லிவிங் கலர்'. அன்று முதல் இவருக்கு ஏறுமுகம்தான்.

'ஏஸ் வென்ச்சுரா', 'பெட் டிடெக்டிவ்' போன்ற படங்கள் இவரை ஹாலிவுட்டின் உச்சாணிக்கொம்பில் உட்கார வைத்தன. 'டம்ப் அண்டு டம்பர்', 'மிமைசெல்ப் ஐரீன்', 'தி மாஸ்க்', 'லியர் லியர்', 'தி கேபிள் கய்' போன்றவை இவரது சூப்பர் டூப்பர் காமெடிப் படங்கள். இந்தப் படங்கள்தான் இவரை அதிக சம்பளம் வாங்கக் கூடிய நகைச்சுவைக் கதாநாயகனாக உயர்த்தியவை.

இவருடைய நடிப்புப் பாணியைப் பின்பற்றி ஹாலிவுட்டில் பலர் உருவானபோதும் எவரும் மக்கள் மத்தியில் இவரளவுக்கு எடுபடவே இல்லை. ஆனாலும் இவரைக் காப்பியடிப்போரின்

சந்தோஷமானாங்க" என்கிற அம்ருதா பி.எஸ். கான்வென்டில் படித்தாலும் 'பூ'சுர சுத்தமாகத் தமிழைப் பேசுகிறார். "வார்த்தையை ஒழுங்கா உச்சரிக்கலைன்னா என் ஜோக்குக்கு நானே சிரிச்சுக்க வேண்டியது தான். என் முன்னாடி எவ்வளவு பெரிய கூட்டம் இருந்தாலும் கை கால் நடுங்காம டைமிங் பிசகாம ஜோக் சொல்ல முடியும். வீட்ல அப்படியொரு டிரெய்னிங்" கண் சிமிட்டுகிறார்.

இப்போதைக்கு டாக்டராக வேண்டும் என்பது கனவு. "கிரேஸி மோகன்சார் கிட்ட இதைச் சொன்னப்போ, 'ஓஹோ, operating tumour, Injecting humour'ன்னு அவர் ஸ்டைல்ல பஞ்ச் வைச் சார்" என்று வளையல் சிணுங்கலுடன் பேசும் அம்ருதா ஜோக்கோடு பேட்டியை முடித்தார்.

(மருத்துவமனையில்)

நர்ஸ் : என்ன சார், அஞ்சு நிமிஷம் லேட்டா வந்திருந்தா பேஷண்டோட உயிரைக் காப்பாத்தியிருக்கலாமே!

உறவினர் : எப்படி?

நர்ஸ் : டாக்டர் வீட்டுக்குப் போயிருப்பாரே!

**- சுண்டெலி**

படம் : **ஸ்ரீஹரி**

# இளமை கல்கி

எண்ணிக்கை மட்டும் ஏறுமுகத்தில்தான் இருக்கிறது. கனடாவில் பிறந்த இவரின் நிஜப் பெயர் ஜேம்ஸ் யூஜின் கேரி. இவருக்குச் சிறுவயதில் ஸ்கூலுக்குப் போவதென்றால் பாகற்காய் சாப்பிடுவது மாதிரி.. முடிந்த வரை போகமாட்டார்.. தப்பித்தவறி போனாலும் பாதியிலேயே கட் அடித்து விடுவார்... ஒருவழியாக ஹைஸ்கூல் டிராப் அவுட் லிஸ்டில் இடம் பிடித்துவிட்டார் இந்த காமெடி கிங்.

இவருக்கு காமெடி மட்டும் தான் வரும் என்றில்லை. பல ரொமான்டிக் கேரக்டர்களிலும் அசத்தி இருக்கிறார். அதை நிரூபிப்பது போல் இவர் திருமணம் செய்து கொண்டது ஹாலிவுட் ஆர்டிஸ்ட் லாரன் ஹோலியைத்தான். காமெடி என்றால் எப்படி இருக்க வேண்டும் என்று ஒருமுறை இவரிடம் கேட்டபோது "காமெடின்னா அது நிச்சயம் யாரையும் குழப்பக் கூடாது.. அதே சமயம் ரொம்பத் தெளிவாகவும் இருக்கக் கூடாது..."ன்னு பதில் சொன்னாராம். இதெப்படி இருக்கு...

**- சிடுமூஞ்சி சிங்காரம்**



# ஹாலிவுட்டின் நாகேஷ்!

# செல்லமே செல்லம்!

புஜ்ஜு, எருமை மாடு, நாய், அரிசி மூட்டை, பூசணிக்காய், குரங்கு, மரங்கொத்தி, சனியன், சண்டக் கோழி, அழுக்குப் பையன், சிடுமூஞ்சி, கண்ணுக்குட்டி, பப்பி, இடியட்... இதெல்லாம் என்னன்னு தெரியாத மாதிரி கேட்பீங்களே? உங்களுக்கா தெரியாது, இது மாதிரி ஏதாவதொரு பேரைத் தானே உங்க லவ்வருக்கு வைச்சிருப்பீங்க?

என்னது, உங்க லவ்வருக்கு இன்னும் செல்லப் பெயரே வைக்கலியா? ஷேம் ஷேம் பப்பி ஷேம்! உடனடியா சட்டுபுட்டுன்னு ஒரு பேரை வையுங்க. என்ன பேரு வைக்கிறதுன்னு தெரியலையா! கவலைப் படாதீங்க. உங்களுக்காக உலக அளவில் பல லவ்வர்ஸ் பயன்படுத்துற செல்லப் பெயர்களைக் கொடுத்திருக்கோம். பிடிச்சதைப் பிச்சி எடுத்துக்கோங்க. ஓ.கே.வா!



# எட்டி டார்லிங்!

இந்த ஜப்பானியர்களுக்கு நாம் என்ன கெடுதல் செய்தோம்? ஏன் இப்படி எல்லோரையும் போட்டு வதைக்கிறார்கள்? இப்பொழுது இந்த எடடி பிசாசு இல்லை என்று யார் அழுதது? ச்சேய்... கண்ட கண்ட கச்சடாவை எல்லாம் கண்டுபிடித்துவிட வேண்டியது, கேட்டால் நவீன தொழில்நுட்பம் என்று பீற்றிக்கொள்ள வேண்டியது.

சரி, யார் இந்த எட்டி? இது ஒரு ஜப்பானிய ஏ.டி.எம். கருவி. கார்டை வாயில் செருகினால் கரன்ஸிகளைக் கக்கும் மூதாதையர்களைவிட நவீனமானது. இதற்கு கார்டே தேவையில்லை. செல்பேசியை இதன் அருகே கொண்டு சென்று ஒரு குட்டி டாட்டா காட்டினால் போதும் 'இந்தா, அள்ளிக்கோ' என்று வாயை முதலை போல் பிளக்கும். கேட்கும் பணத்தைக் கொட்டும்.

இந்த எட்டிக்காகவே பிரத்யேகமாக ஒரு மொபைல் மாடலை உருவாக்கியிருக்கிறார்கள். P506iC என்பது அதன் பெயராம். நல்ல பெயர். ஒவ்வொரு மொபைலுக்கும் 50,000 ஜப்பானிய யென்கள் வரை செலவழிக்கும் சக்தியைக் கொடுத்திருக்கிறார்கள். நம்மூர் மதிப்புப்படி கிட்டத்தட்ட 20,500 ரூபாய். கஷ்ட காலம்தான்.

பட்டர்ஃபிளை
ப்யூட்டி
ப்ரௌனி
சாக்லேட்
குக்கி
கௌபாய்
க்யூட்டி
டெவில்
ஹேண்ட்ஸம்
ஹாட்டி
ஹார்ட்டி
லவ்வி
பிரின்ஸ்
புஸிகேட்

உலக அளவில் பயன்படுத்தப்படுற டாப் 3 செல்லப் பெயர்கள் : டார்லிங், ஸ்வீட்டி, ஹனி. நம்ம தமிழ்ல எது டாப் செல்லப் பெயர்னு கேட்கறீங்களா.. எங்க பிரகாஷ்ராஜ் ஸ்டைல்ல வாசிங்க.

'செல்லம்! ஐ லவ் யூ!'

**- ரோடு ரோமியோ**

# இளமை கல்கி

'அச்சச்சோ, இன்னிக்குன்னு பார்த்து பர்ஸை வீட்டிலேயே வச்சிட்டு வந்துட்டேனே' என்று சொல்லி அவரவர் சிநேகிதிகளிடமிருந்து இனி யாரும் கலபத்தில் தப்பிவிட முடியாது. 'அதான் எட்டி டார்லிங் இருக்கே' என்று உங்கள் செல்பேசியைப் பிடுங்கிக் கொண்டு உங்களுக்கு டாட்டா காட்டிவிடுவார். ஐஸ்க்ரீம் பார்லர், கிமோனோ கடை, நொறுக்குத் தீனி வண்டி, சினிமா தியேட்டர் என்று நீங்கள் அச்சப்படும் அனைத்து இடங்களிலும் இந்த எட்டியை நிறுவிவிட்டார்கள். போதாதா?



சித்திர எழுத்துக்களை நெற்றியில் ஒட்டிக்கொண்டு எதுவுமே தெரியாததைப் போல அப்பிராணியாக அமர்ந்திருக்கிறது எட்டி. செல்பேசியைப் பார்த்தால் ஏகத்துக்கும் குஷியாகிவிடுகிறது. அதை வைத்திருப்பவரின் சோகம் தோய்ந்த முகத்தைக் கண்டுகொள்வதேயில்லை. செல்பேசி தன்னை நெருங்கியவுடன் 'க்ளிங் க்ளிங் குளிங்' என்று உற்சாகமாக சப்தமிடும். செல்போன் வைத்திருப்பவரின் வயிற்றிலும் கிட்டத்தட்ட இதே தொனியில சப்தங்கள் எழலாம்.

ஏற்கெனவே குட்டியூண்டாக சுருங்கிப் போயிருக்கும் ஜப்பானிய இளைஞர்களின் முகம் இந்த எட்டியால் மேலும் சுருங்கிப் போயிருப்பதாகக் கேள்வி. இதற்கு நேர்மாறாக இவர்களுடைய பெண் சிநேகிதிகளின் முகம் மலர்ந்து உற்சாகத்துடன் காணப்படுகிறதாம். 'என கருமை எட்டியே' என்று சிலாகிக்கிறார்களாம். கொஞ்சம் பொறுங்கள் இங்கும் வந்துவிடும்.

**- திருவோடு**

# 23

# எங்கே என் கண்ணன்?



இந்திரா சௌந்தர்ராஜன்

'நான் உண்டென்றும்
இல்லையென்றும்
சொல்லுவர்! உண்மைதான்...
நான் இரண்டுமானவன்!'
- ஸ்ரீ கிருஷ்ணன்.

அந்தக் கண்ணன் தன் சட்டைப் பாக்கெட்டில் இருந்து துளசியை எடுப்பதை அனுராதா கவனித்தாள். அவனும் அவளைப் பார்த்துச் சிரித்தபடியே அவள் அருகில் சென்று அந்தத் திருத்துளசி இலையை நீட்டினான்.

"இது...?"

"துளசி... இங்கே கணேஷ் துளசி பத்தி போன்ல பேசவும் என் பாக்கெட்ல கிடந்த இது ஞாபகம் வந்தது. மகாவிஷ்ணு பிரசாதம்... பிடி!"

அவன் சொல்லித் தந்த விதம் கணேஷை விருட்டென்று நிமிரச் செய்தது. போனில் அவன் ஒன்றும் துளசி பற்றிப் பேசவில்லை. அந்தப் பக்கமாய் இருந்த டாக்டர்தான் ஒரு உதாரணத்துக்காக அதைப் பற்றிப் பேசியவர். அது எப்படி இவன் காதில் விழுந்திருக்க முடியும்?

"கணேஷ்.... எவ்வளவு வேகமா நான் வரமுடியுமோ வந்துட்டேன்... இனி நான் எதுக்காக வந்தேனோ அந்த வேலைகளைப் பார்க்கணும். நீ நல்லா ஓய்வெடுத்துக்கலாம். நீ செய்ய நினைச்ச எல்லாக் காரியங்களையும் நான் செய்துடறேன். அதுதான் அந்த கிருஷ்ணமூர்த்தியோட உத்தரவாச்சே..." - என்று அவன் சொல்லச் சொல்ல கணேஷுக்குக் கொஞ்சம் எரிச்சலாகவும் இருந்தது.

"அனு... அந்த செல்போனை எடுத்துக் கொஞ்சம் ஆடிட்டர் நம்பர் போட்டுத் தாங்களேன்..."

"ஓ.. அவரோட பேசணுமா?"

"ஆமாம்... அவர் தன் ஸ்டூடண்டுல ஒருத்தனைத்தான் அனுப்பறேன்னார். இங்க இவரைப் பார்த்தா அவருக்கே குரு மாதிரி இருக்கு. இவரோட பேச்சும் போக்கும்..."

- கணேஷ் அந்தக் கண்ணன் காதிலும் விழும்படிதான் பேசினான்.

"ரொம்ப சரி அம்பி. நீ சொன்னது... அந்தக் கிருஷ்ணமூர்த்திக்கு இந்தக் கண்ணன் ஒரு குரு மாதிரிதான். ஒருநாளைக்கு ஒரு தடவையாவது என்னைப் பார்க்கச்சே கண்ணா நீதான் எனக்கு எல்லாம்னு அந்தக் கிருஷ்ணமூர்த்தி சொல்லிடுவார். என்னைப் பார்க்கச்சேயெல்லாம் அவர் சொல்ற இன்னொரு விஷயம் என்ன தெரியுமா?"

கண்களைச் சிமிட்டிக்கொண்டு கண்ணன் கேட்ட விதமே அலாதியாக இருந்தது. அதில் மனமும் அப்படியே கரைந்து போயிற்று.

"கண்ணா... நீ சாதாரண ஆள் இல்லை. உன் மந்திரம் அதாவது பேரே ஒரு மந்திரம். நீயோ ஒரு யந்திரம்! இருந்தாலும் உன் தந்திரங்கள்தான் எனக்குப் பிடிக்கும். மொத்தத்துல நீ ஒரு 'யந்த்ர மந்த்ர தந்த்ரன்'னு வேடிக்கையா சொல்வார்..."



"மந்திரம்கறது மனகல திறம் இல்லாதவ னுக்குன்னு உள்ள பலவீனமான ஒரு விஷ யம். யந்திரம்கறது விஞ்ஞானத்துல பெரிய விஷயம். ஆனா ஆன்மிகத்துல அது ஒரு பக்கா ஃப்ராட்! அடுத்து தந்திரம்... அதுதான் இப்ப ஆன்மிக உலகம் முழுக்க நிரம்பிக் கிடக்கு. கடவுளின் பேரால எப்படி எல்லாம் ஏமாற்ற முடியுமோ அது நிறையவே நடக் குது. என்வரைல இந்த மூணுமே ஒரு மோச மான விஷயம்..."

"அப்ப என்னையும் ஒரு மோசமான வன்னு சொல்லாமச் சொல்றே... அப்படித் தானே...?" - கண்ணன் அடுத்த நொடியே மடக்கி விட்டான். கணேஷ் அதற்கு மறுப் புக் கூறவில்லை. மௌனமாக அப்படித் தான் என்கிற மாதிரி பார்த்தான். அப்படிப் பார்க்கும்போதே நாம் இவன் வரையில் சற்று அவசரப்படுகிறோமோ என்று பயப் படுகிற மாதிரியும் இருந்தது. அனுராதா கணேஷின் கருத்துக்கு அந்தக் கண்ணன்

என்ன மாதிரி பதில் கூறப் போகிறான் என்கிற மாதிரி பார்த்தாள்.

"என்னம்மா... சாரும் நானும் நேர் எதிர் திசைல இருக்கோமா?"

"அ... ஆமாம்..." - அவளிடம் ஒரு சன்ன மான திணறல்.

"சும்மா தைரியமா சொல். ஒரு பத்திரிகையாளப் பெண்மணி நீ. தன்னந்தனியா தமிழ்நாட்டுல இருந்து வந்துருக்கே... இங்க தங்க இடம் கிடைக்காதப்போ புத்திசாலித்தனமா இந்தக் கணேஷைத் தேடிக் கண்டுபிடிச்சு இங்கே வந்து தங்கவும் தெரிஞ்சிருக்கு... எவ்வளவு தைரியம் இருக்கணும் உனக்கு...?"

- கண்ணன் திருப்பிக் கேட்ட தொனி பாராட்டா இல்லை குட்டா என்று உணர முடியாத விதத்தில் இருந்தது.

"மிஸ்டர் கணேஷ் கேட்டதுலேயும் நிறைய மீனிங் இருக்கறதா நான் நினைக்கறேன்... அவர் நம்ம ஆன்மிகத்துல உள்ள குற்றம் குறைகளைக் குறிப்பிடறார். அதை ஒத்துக்கத்தானே வேணும்?"

"அப்ப நிறைகள் என்னன்னு இவருக்குத் தெரியுமா?"

"ஒரு நிறையும் கிடையாது. கடவுள் விஷயம் என்வரைல ஒரு கற்பனை. மனுஷனைக் கட்டிப் போட சில சுயநலமுள்ளவங்க செய்த தந்திரம். இல்லே நல்லது செய்யறதா நினைச்சு செய்யப்பட்ட ஒரு தப்பான விஷயம்."

"ஓஹோ..."

"வேண்டாம் மிஸ்டர் கண்ணன்... இந்தக் கடவுள் சர்ச்சை வேண்டாம். அதுவும் என்கிட்ட வேண்டவே வேண்டாம். எந்தக் கடவுளும் நேர்ல வரப் போறதில்ல. அதனால நம்ம குழப்பங்களும் தீரப் போறதில்ல. இல்லாத ஒண்ணைப் பத்தி எவ்வளவு பேசினாலும் என்ன புண்ணியம்? அதனால அந்தப் பேச்சை விடுங்க. பொழப்பக் கவனிப்போம்."

"அதுவும் சரிதான்... இவ்வளவு தீர்மானமா நீ நினைக்கும்போது கடவுள் எதிரிலேயே இருந்தாலும் அவரை நம்பவா போறே... விட்டுத் தள்ளு... நீ சொன்ன மாதிரி பொழப்பக் கவனிப்போம்."

"நான் இப்ப என்ன செய்யணும்?"

- கண்ணனும் சட்டென்று ஒரு பெரிய விவாதத்துக்குரிய விஷயத்தை அப்படியே ஓரம்கட்டி விட்டு கணேஷிடம் அப்படிக் கேட்டது அனுராதா வரையில் பெரிய ஏமாற்றமாக இருந்தது.

"உங்களுக்கு இந்தக் காசி புதுசாச்சே... நான் எதைன்னு சொல்வேன்... மடத்து கணக்கு வழக்குகள் ஒரு பக்கம். புதுசா தீரஜ்குமார்னு ஒருத்தரைப் பார்க்க வேண்டியிருக்கு. ஆட்டோமொபைல் ஸ்பேர் பார்ட்ஸ் பிசினஸ் பண்றவராம். அவரோட மொத்த அக்கவுண்ட்ஸையும் அப்டேட் பண்ணணும்... அதுக்காக போய்த்தான் நான் இப்ப இப்படிக் கால்ல அடிபட்டு நகர முடியாத நிலைல இருக்கேன்..."

"கவலைப்படாதே... காசி ஒண்ணும் எனக்குப் புதுசு இல்லை. இந்தப் பூமியில எந்த இடமுமே எனக்குப் புதுசு கிடையாது... இப்பவே நான் போய் அந்த தீரஜ்குமாரைப் பார்த்துப் பேசிட்டு வரேன். நான் வேற என்ன பண்ணணும்?"

"இல்ல... முதல்ல இதை முடிச்சிட்டு வாங்க. அப்புறம் சொல்றேன்..."

"அப்ப சரி... நான் போய்ட்டு வரேன்!"

- கண்ணன் கடமையைச் செய்யத் தயாராகி விட்டான். அவன் கொண்டு வந்திருந்த அந்தத் துணிப்பை அந்த அறையில் சுவரோரமாக கிடந்தது. அவன் தலை மறைந்த மறுநொடியே கணேஷ் பரபரப்புக்குத் தாவினான்.

"அனுராதா... அந்த செல்போனை கொடுங்க இப்படி" - என்று கேட்டு வாங்கி எண்களைத் தட்டி காதருகே வைத்து வைத்து ஏமாந்தான்.

"யாருக்கு கணேஷ்... உங்க ஆடிட்டருக்கா?"

"ஆமாம்... வந்திருக்கற இந்த ஆளைப் பார்த்தா ஒரு சி.ஏ. ஸ்டூடண்ட் மாதிரியே தெரியலை. பேச்சும் தோரணையும் மட்டும் பெருசா இருக்கு. இப்ப கூட பாருங்க... அந்த தீரஜ்குமாரைப் பார்க்க அட்ரஸ் இல்லாமலே புறப்பட்டுப் போயிருக்கான். கொஞ்ச நேரத்துல திரும்பி வருவான் பாருங்க... அதான் ஆடிட்டர்கிட்டேயே கேட்ருவோம்னு பார்த்தா இப்பப் பார்த்து இந்த செல்லுக்கு லைனே கிடைக்க மாட்டேங்குது. சசே!"

"கணேஷ்... அந்த நபர்கிட்ட பறவை

"அந்தக் கடை ஓனருக்கு ஆண்கள் எல்லாம் சேர்ந்து பாராட்டு விழா நடத்தறாங்களே... எதுக்கு?"

"'பெண்கள் ஷாப்பிங் செய்ய அனுமதி இல்லை'னு கடை வாசல்ல போர்டு மாட்டியிருக்காரே... அதுக்குத்தான்!"

- அம்பை தேவா

கள்லாம் ரொம்ப சகஜமா வந்து ஒட்டிக்கிட்டதைக் கவனிச்சீங்களா?"

"அதுக்கென்ன அனுராதா?"

''உங்களுக்கு அது ஆச்சரியமா இல்லை...?''

"கொஞ்சம் ஆச்சரியம்தான். அப்படியே நான் பேசாத துளசி பத்தி அந்த நபர் பேசினதும் கூட எனக்கு ஆச்சரியமாதான் இருக்கு... இன்ஃபாக்ட் உங்களைக் கூட நல்லாவே தெரிஞ்சிருக்கே..."

"ஏன்.. உங்க ஆடிட்டரே என்னைப் பத்திச் சொல்லி அனுப்பியிருக்கலாம் இல்லையா?"

''ஜர்னலிஸ்ட்டுன்னு சொல்லியிருக்கலாம். தனியா வந்ததும், பாதுகாப்பான இடம் கிடைக்காம சிரமப்பட்டதும் அவருக்குத் தெரியாதே..."

"ஆமாம்ல.. அதே சமயம் அவர் கொஞ்சமும் தடுமாற்றமில்லாம பேசறதும் பார்க்கறதும் சம்திங் எனக்கு என்ன சொல்றதுன்னே



தெரியலை..."

"போதும் அனுராதா... அந்தத் துணிப்பையை எடுங்க. எந்த ஆடிட்டர் இப்படித் துணிப்பையோட வருவான்... அதுவும் ஃப்ளைட்ல..."

- கணேஷ் முணுமுணுத்துக் கொள்ள அனுராதா அந்தப் பையை எடுத்து வந்தாள். மெத்து மெத்தென்று இருந்த அதனுள் கட்டுக்கட்டாய் சில ஏடுகளும் இருக்கிறார் போலத் தோன்றியது. கணேஷ் ஜிப்பைத் திறக்க முயன்றான். ஆனால் சிக்கிக் கொண்டது போல அது திறக்க மறுத்தது. எவ்வளவு முயன்றும் முடியவில்லை.

"கணேஷ்... இது அநாகரிகம்... எதுக்கு அவர் பையைத் திறக்கறீங்க..."

"ஐ நோ அனுராதா... எனக்குள்ள இப்ப நிறைய சந்தேகங்கள். அதை எப்படித் தீர்த்துக்கறதுன்னுதான் தெரியல."

''அவர்கிட்டேயே கேளுங்களேன்...''

அவனும் அரைமனதாகப் பையைத் திறக்க மாட்டாதபடி அப்படியே பக்கமாக சுவர் ஓரமாக வைத்தான், பெருமூச்சும் விட்டான்.

ஆபீசிலிருந்து சம்பத் காரில் வந்து இறங்கியபோது ஆச்சரியம் காத்திருந்தது. வீட்டு வாசலில் இருந்து உள் வரை வரிசையாகத் தீபங்கள்! அன்று கார்த்திகை தீபம்... அடுத்தகட்ட ஆச்சரியமாக பூஜை அறையில் சாரு ஸ்லோகம் சொல்லிக் கொண்டிருப்பதைப் பார்த்தான்.

சில நாட்களாகவே சாருவிடம் பெரிய அளவில் மாற்றம். ஆனால் சாருவின் இந்த மாற்றத்துக்குப் பின்னால் பெரிதாக ஏதோ இருப்பதாக அவன் மனது கணக்குப் போட்ட போது செல்போன் சிணுங்கியது.

"ஹலோ..."

"ஹலோ நாங்க கஸ்தூரிபா ஆஸ்ரமத்துல இருந்து பேசறோம். மிஸ்டர் அண்ட் மிஸஸ் சம்பத் வீடுதானே?'' ஒரு பெண் குரல் கேட்டது.

''எக்ஸாக்ட்லி... நான் சம்பத்தான் பேசறேன்.."

"சார் டாக்டர் சகுந்தலா வரதன் எங்க ஆஸ்ரமத்தோட வெல் விஷர். எங்க ஆஸ்ரமத்துல அடைக்கலத்துல இருந்த ஒரு அனாதைப் பெண்ணுக்கு இன்னிக்கு ஆண் குழந்தை பிரசவமாச்சு. அந்தப் பெண் கொஞ்சம் மனநிலை சரியில்லாதவ..."

"மேடம்.. இதை எதுக்கு இப்ப என்கிட்ட சொல்றீங்க..."

''காரணம் இருக்கு சார். அந்தப் பொண்ணு பிரசவத்துல செத்துப் போய்ட்டா. ஆனா குழந்தை ஆரோக்கியமா நல்லா இருக்கு. உங்க மனைவிக்குக் குழந்தை பிறக்க வழியில்லாததால இப்படிப்பட்ட குழந்தைகள் பிறக்கும்போது அதை நீங்க வளர்க்க விரும்பலாம்கறது டாக்டரோட அபிப்ராயம். அவங்கதான் உங்க நம்பர் தந்தாங்க. விஷயத்தைச் சொல்லச் சொன்னாங்க."

- சம்பத் செல்போனை அப்படியே முடக்கினான். இலேசாக நெஞ்சையடைத்தது. அதே சமயம் சாருவின் மாற்றத்துக்குக் காரணமும் பளிச்சென்று புரிந்து விட்டது.

திரும்பவும் தொலைபேசி அழைப்பு!

ஆனால் எழுந்து போய் ரிசீவரை எடுக்க முடியாதபடி ஒரு தடுமாற்றம் அவனிடம்...

பூஜித்துக் கொண்டிருந்த சாரு சப்தம் கேட்டு வந்தாள். சம்பத்தைப் பார்த்து வியந்தபடியே ரிசீவரை எடுத்து காதில் வைத்து 'ஹலோ' என்றாள். அடுத்த நொடியே அவள் முகத்தில் ஏராளமான அதிர்ச்சி!

(தொடரும்)

# சண்டக்கோழி

ஹாஸ்டலில் தங்கி கல்லூரிப் படிப்பை முடித்து விட்டு தனது சொந்த ஊரான மதுரைக்குக் கிளம்பும்முன், அறை நண்பன் ராஜாவுடன் அவனது ஊரான சிதம்பரத்துக்கு வருகிறான் பாலு. நண்பன் வீட்டில் ராஜாவுக்கு ராஜ உபச்சாரம். நண்பனின் தங்கை ஹேமாவுடன் லவ். சில தினங்களில் அங்கிருந்து சொந்த ஊருக்குக் கிளம்ப பேருந்து நிலையம் வரும் பாலு, எதிர்பாராத சூழ்நிலையில் வில்லன் காசியை கடைவீதியில் விட்டு அடித்து, துவைத்துக் காயப் போடுகிறான். குமுறிக்கொண்டிருந்த உள்ளூர் மக்கள் விழி விரிய சந்தோஷமாய் வேடிக்கை பார்க்கிறார்கள். பாலு புறப்பட்டுப் போன பிறகு, 'ஒரு பொடிப்பய என்னை அடிச்சிட்டானே' என்று அவமானத்தில் கூனிக் குறுகும் காசி அடுத்து என்ன செய்கிறான் என்பது தான் க்ளைமாக்ஸ்.



விஷால் காலேஜை விட்டுப் பிரியும்போது கண்ணீரோடு பிரியாமல், 'சுராங்கனி' என ஆடிப்பாடி பிரிவதாய் ஆரம்பிக்கும் காட்சி வித்தியாசமான சிந்தனை.

வசீகரிக்கும் தோற்றம் இல்லையென்றாலும் உயரமும் உடல்வாகும் விஷாலுக்கு டபுள் ப்ளஸ்! மீரா ஜாஸமின், பாடல் வரிகளில் வருவது போல் ஓர் 'அழகுச் சனியன்'தான்! நடிப்பால் செம சேட்டை பண்ணி மீரா கேரக்டர்தான் ரிலீஃப். ராஜகிரணின் இரண்டாவது இன்னிங்ஸில் இந்தப் படம் குறிப்பிடத்தக்கது. வில்லன் காசியாக அறிமுகமாகியிருக்கும் லால் அந்த ரோலுக்கு கனகச்சிதம்!

'தாவணி போட்ட தீபாவளி' பாடல் மட்டும் நெம்பர் ஒன். பின்னணி இசையில் யுவன் அவ்வளவு சோபிக்கவில்லை. க்ளைமாக்ஸ் காட்சியில் வில்லனும் நாயகனும் 'சண்டக்கோழிகளாய்' ஒற்றைக்கு ஒற்றை மோதும் காட்சியில் கேமரா தூள்! ஜீவா, நீரவ் ஷா - ஹாட்ஸ் ஆஃப்!

முழு நீள ஆக்ஷன் படத்தில் வெட்டிச்சவடால வசனங்கள் இல்லை. விரசமான வசனங்களும் இல்லை. 'ஒவ்வொரு அரிவாளுக்குப் பின்னாடியும் பல வருஷத்துப் பகை இன்னும் மிச்சம் இருக்கு!'' என்பது போன்ற அழுத்தமான வசனங்கள். யார் என்று பார்த்தால் வசனம் எஸ். ராமகிருஷ்ணன்.

அங்கங்கே 'ரன்'னின் பாதிப்பு தெரிந்தாலும் சலிப்பு ஏற்படவில்லை. முதல் பாதி நிற்காமல் போகும் எக்ஸ்பிரஸ். இரண்டாவது பாதி அவ்வப்போது நின்றாலும் வேகமாகப் போகும் மெட்ரோ ரயில். பெரிய நடிகர்கள், தேவையற்ற சென்டிமெண்ட் இல்லாமல் வெளி வந்திருக்கும் சண்டக்கோழி - ஜெயிக்கிறகோழி!

- லஜ்ஜாவதி

# தூத்துக்குடி மெட்டல்ஸ்

No: 196. T.H. ரோடு,
திருவொற்றியூர்,
சென்னை - 600 019



## 21-ஆம் ஆண்டு நிறைவு விழாவும்
## புத்தாண்டு சிறப்பு விற்பனையும்

## 30.12.05 முதல் 15.1.06 வரை

கல்யாண சீர்வரிசை பாத்திரங்கள், வீட்டு உபயோக பொருட்கள், பரிசு பொருட்கள் (Cooler, Gas stove, Mixie, Grinder, Almarah, Furniture Steels, Aluminium, Plastic) வாங்க சிறந்த இடம்.

**பாத்திர வியாபாரத்தில் 50 வருட அனுபவம் பெற்ற நிறுவனம்.**

நம்பிக்கை • தரம்
வசந்த் & கோ

இந்தியாவின் No.1 டீலர்

# வசந்த் & கோ

## இப்பொழுது புத்தாண்டு தள்ளுபடி விற்பனை

தயாரிப்பாளர்கள் வழங்கும் ஏராளமான சலுகைகள், பரிசுகள் மற்றும் நீட்டிக்கப்பட்ட வாரண்டி, மேலும் பைனான்ஸ் கம்பெனிகள் வழங்கும் சலுகைகள்

**TCL 29" TV Rs. 10,690**

**A/C களுக்கு மிக குறைந்த விலை**

**• 100% வட்டி இல்லை** • 100% பிராசஸிங் சார்ஜ் இல்லை****

**ONIDA Flat TVs**
- Additional 1 year warranty (1+1) மற்றும்
- வாங்கும் CTV மாடல்களை பொறுத்து Stainless Steel Flask முதல் DinnerSet வரை நிச்சயப்பரிசு

**LG**
- குறிப்பிட்ட மாடல் DC Refrigerator-டுடன் 1 Gram தங்க நாணயம் இலவசம்.
- குறிப்பிட்ட மாடல் FF Refrigerator-டுடன் Dinner set worth Rs. 5990 இலவசம்
- LG W/M-களுக்கு வாங்கும் மாடலை பொறுத்து Bajaj Dry Iron, Steam Iron இலவசம்
- LG Front Loading W/M Model No. 85260 தவிர இதர மாடல்களுடன் ஒரு LG Grill Microwave Oven இலவசம்

**Whirlpool**
- வாங்கும் மாடலை பொறுத்து நிச்சயப்பரிசாக IRA Diamond Pendent worth Rs. 2300 அல்லது Kitchen Utility Set worth Rs. 300/- இலவசம்
- மேலும் அனைத்து மாடல் Whirlpool தயாரிப்புகளை வாங்குவோருக்கு Holiday Package worth Rs. 4000/- இலவசம்

**PHILIPS**
- அனைத்து மாடல் CTV-களுக்கும் 1 year Extended warranty (1+1)
- Philips DVD Hifi system FWD 790, FWD 796, FWD 576 World Space Radio Diva with 3 months subscription free
- Citi Bank coupon கொண்டு வந்து Rs. 2500 மதிப்புள்ள Philips தயாரிப்புகள் வாங்குவோருக்கு 5.5% Discount

- கிரெடிட் கார்டு உள்ளவர்களுக்கு 6 மாத எளிய தவணை முறை
- குறைந்த முன்பணம் • குறைந்த மாதத் தவணை
- உடனடி கடன் பெறும் வசதி • எலக்ட்ரானிக் கிளியரன்ஸ் வசதி
- கிரெடிட் கார்டுகளுக்கு சர்வீஸ் சார்ஜ் இல்லை
- சிட்டி பேங்க் கிரெடிட் கார்டு மூலம் EMI யில் வாங்குபவர்களுக்கு 10 கிராம் வெள்ளி இலவசம்

**HYUNDAI**
- For all Model CTVs 2 வருட Additional Warranty (1+2)
- Only for Flat CTVs Reebok Tote Bag / Tawa Sets / Wrist Watch / Clock இலவசம்

**IFB**
- வாங்கும் IFB Microwave Oven model-லை பொறுத்து Holiday Package / 3 Burner Gas Stove / Nirlep 4 Pieces set / Nirlep 7 Pieces set / Break Fast Maker இலவசம்

**VIDEOCON**
- All Model CTV மாடல்களுக்கும் 2 வருட Extended Warranty இலவசம். (1+2)
- வாங்கும் CTV மாடலை பொறுத்து T-Shirt அல்லது Yera Glass ware set இலவசம்
- குறிப்பிட்ட மாடல் Refrigerator மற்றும் W/M-களுடன் Rs. 1000 மதிப்புள்ள Pearl Set இலவசம்

ஸ்ரீ ராம் பைனான்ஸ் மூலம் பிளஸ்மா கம்ப்யூட்டர் முதல் டி-ஷர்ட் வரை பெறலாம்* GE Money பைனான்ஸ், Bajaj Auto பைனான்ஸ், TVS பைனான்ஸ் மூலம் கடன் பெறும் வசதி

citibank ரூ. 30,000 செலவு செய்து இலவச விமான டிக்கெட் பெறுங்கள் (Citibank-ன் வரையறுக்கு உட்பட்டது) 31.12.2005 வரை
FLY SURE
*Citibank Terms & Conditions apply

**6% Cash back**
Standard Chartered
Credit Cards (EMI only)
சென்னையில் மட்டுமே
31-12-2005 வரை

**5% Cash Back Offer**
*ICICI EMI-On-Call only
31-12-2005 வரை

ரூ. 2000க்கு ICICI கிரெடிட் கார்டு மூலம் பொருள் வாங்கி மாருதி ஆல்டோ கார் வெல்ல வாய்ப்பு. இச்சலுகை 30.01.2006 வரை (தி.நகர் கிளைகளில் மட்டுமே)

**கண்காட்சி மற்றும் சிறப்பு விற்பனை**
**ராஜா கல்யாண மண்டபம்,** கச்சேரி ரோடு, மயிலாப்பூர், சென்னை-4.
**ஆனந்தா திருமண மண்டபம்,** 6, பக்கம் வேலின் ரோடு, பல்லாவரம், சென்னை-43.
**பாத்தாலை கோதண்டபாணி கல்யாண மண்டபம்** 173-177, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை - 600 010.

SAMSUNG | SONY | SIEMENS | Electrolux | SANSUI | Godrej | HITACHI | Haier | SHARP | GENERAL | Carrier | EUREKA FORBES | KENSTAR | ULTRA | VENUS | TCL

**சென்னை :** தி.நகர் – 52010572, 52029797, 52010573 கோடம்பாக்கம் – 52010576 அடையார் – 52010579 குரோம்பேட்டை – 52010582 புரசைவாக்கம் – 52010571 மயிலாப்பூர் – 52010578 ராயபுரம் – 52010584 வண்ணாரப்பேட்டை – 52010583 பாடி – 52010577 நங்கநல்லூர் – 52056514 ஆலப்பாக்கம்–போரூர் – 52010581 தாம்பரம் – 52010575 செங்கல்பட்டு – 226241, விழுப்புரம் – ஹாஸ்பிடல் ரோடு, வேலூர் – காட்பாடி ரோடு, ஆற்காடு ரோடு, சத்துவாச்சாரி, மதுரை – தெற்கு மாசி வீதி, திண்டுக்கல் – புதிய அக்ரஹாரம் தெரு, பழனி ரோடு, திருச்சிராப்பள்ளி – போர்ட் ஸ்டேஷன் ரோடு, தஞ்சாவூர் – சௌத் ராம்போர்ட், அரவிந்த் காம்ப்ளக்ஸ், பட்டுக்கோட்டை – அறந்தாங்கி ரோடு, திருநெல்வேலி ஜங்ஷன் – பராசக்தி பில்டிங்ஸ், புதுக்கோட்டை – அருகே திருமண மண்டபம், பாளையங்கோட்டை – திருவனந்தபுரம் ரோடு, தூத்துக்குடி – பியர்ல் பிளாசா, கோவில்பட்டி – AKS தியேட்டர் ரோடு, நாகர்கோவில் – வடசேரி பஸ் ஸ்டாண்டு எதிரில், பாண்டிச்சேரி – மகாத்மா காந்தி ரோடு, கோயம்புத்தூர் – ஒப்பணக்கார தெரு, க்ராஸ் கட் ரோடு, சேலம் – முதல் அக்ரஹாரம் வைபவ் பிளாசா, ஈரோடு – பெருந்துறை ரோடு, கரூர் – 25, கோவை ரோடு, (K.V.R.பில்டிங் அருகில்) 236623 திருப்பூர் – குமரன் ரோடு, ஓசூர் – தாலுகா ஆபீஸ் ரோடு, பெங்களூர் – 101/1, கே.கே. ரோடு, (டபுள் ரோடு) பிரெஸ்டிஜ்கோர்ட்

ஞாயிறும் விற்பனை உண்டு